

இந்தியப் புராதனக் கதைகள்

26



நவீன வேதாளக் கதை

19



மர்மக்குளம்

13



விநாயகர்

45

## பொருளடக்கம்






SUBSCRIPTION

For USA and Canada
Single copy $2
Annual subscription $20
*Remittances in favour of Chandamama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony.
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில்
விளம்பரங்களை வெளியிடத்
தொடர்பு கொள்ள வேண்டிய
முகவரி:
சென்னை
Ph : 044 - 2231 3637
2234 7399
e-mail : advertisements@chandamama.org
டில்லி
மோனா பாட்டியா
Ph : 011 - 651 5111
656 5513 / 656 5516
மும்பை
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022 - 266 1599
266 1946 / 265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# படிக்கும் பழக்கம் வேண்டும்

பெரியவர்கள் கதைகள் சொல்வதைக் குழந்தைகள் கேட்பது வழக்கம். பாட்டிகள் கதைகள் கூறுவது முன்பெல்லாம் ஒவ்வொரு வீட்டிலும் அன்றாட நிகழ்ச்சி. இப்போது குழந்தைகளுக்குப் படிக்கக் கதைப் புத்தகங்கள் வருகின்றன. குழந்தை இலக்கியம் வேகமாக முன்னேறி வருகிறது. ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு மொழியிலும் குழந்தைகளுக்குப் புத்தகங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. நம் நாட்டிலும் புத்தகங்கள் எழுதப்பட்டு அச்சாகி வெளியிடப்படுகின்றன. இவற்றை வாசகர்கள் படித்து ரசிக்கிறார்கள். இவை பொது அறிவு, கல்வி, பொழுது போக்கு எனப் பல விதத்திலும் பயன்படுகின்றன. ஆனால் இவை எல்லோருக்கும் கிடைக்கும் அளவிற்கு அதிகமாக இல்லை.

சிங்கப்பூரில் 'படிக்கத் திட்டம்' எனப் புதுமையான வழி பரீட்சிக்கப்பட்டு வருகிறது. வாரம் ஒரு முறை அல்லது இரு முறை தொண்டர்கள் வீடுகளுக்குபோய் குழந்தைகளுக்குப் புத்தகங்களைப் படித்துக் காட்டுகிறார்கள். குழந்தைகள் படிப்பதை ஊக்குவிக்க 'படிக்கும் மையங்கள்' அமைக்கப்பட்டுள்ளன. இவற்றை சினெயா தொண்டு நிறுவனம் நடத்துகிறது. குழந்தைகளும் தினமும் இங்கு வருகிறார்கள். நூலக உதவி மேஜைகள் என சமுதாய வட்டார நூலகங்கள் நடத்துகின்றன. ஒரு குடும்பமே இதைப் பயன்படுத்திக் கொள்ளும் விதத்தில் இது அமைக்கப்பட்டுள்ளது. இதனால் குழந்தைகளுக்குப் படிக்கப் புத்தகங்கள் கிடைக்கின்றன.

நம் நாட்டில் பல மாநிலங்களில் நூலக இயக்கம் வெற்றிகரமாக நடைபெற்று வருகிறது. படிக்கும் பழக்கம் குறைந்து விடவே கூடாது. படிப்பதால் தான் மனிதன் பண்படுகிறான். இதை மனதில் கொள்வோம்.

Visit us at : http://www.chandamama.org
ஆசிரியர் : விஸ்வம்



**இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்**

# இந்திய மாவீரர்கள் – 18

**நமது தேசீய இயக்கத்தின் தலைவர்கள் சிலரைப் பற்றிய வினாக்கள் இவை. விடைகளை எழுதுங்கள் பார்க்கலாம்.**

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. நான் 1905-ல் இந்திய தேசிய காங்கிரசின் தலைவனாக இருந்தேன். மிதவாதக் கொள்கை கொண்ட நான் செர்வன்ட்ஸ் ஆஃப் இண்டியா சொஸைடியை நிறுவினேன். நான் யார்?

---

2. 1918–ல் இந்திய தேசீய காங்கிரஸின் 34வது கூட்டத்தின் தலைமை வகித்தேன். எம்.எஸ்.ஆனேயுடன் 1934–ல் புதிய கட்சியைத் துவக்கினேன். நான் யார்?

---

3. கேரளாவில் பிரிட்டிஷ் படையின் தாக்குதலை வெற்றிகரமாக எதிர்த்தவன் நான். என்னைக் கேரள சிம்மம் என்பார்கள். நான் யார்?

---

4. இந்திய சிவில் சர்வீஸில் முதல் நான்கு இந்திய அதிகாரிகளில் ஒருவன் நான். இந்திய தேசீயத்தின் தந்தை எனவும் குறிப்பிடப்படுகிறேன். நான் யார்?

---

5. நான் 1921-ல் என் வழக்கறிஞர் தொழிலை விட்டவன். 1923ல் சுயராஜ்ஜியக் கட்சியை நிறுவியவன். நான் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ..............................

....................................................................

....................................................................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................................

....................................................................

பின்கோடு: ...................... போன்: ..........................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-18**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஏப்ரல் 5, 2003

நிபந்தனைகள்:
1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்



# திரைகடல் தாண்டிய அம்புலிமாமா...

*- சிங்கப்பூர் பதிப்பின் வெளியீட்டு விழா*

இந்திய, சிங்கப்பூர் பத்திரிகைகளிலும் தொலைக்காட்சியிலும் அம்புலிமாமாவின் சிங்கப்பூர் இரு மொழி பதிப்புக்கு பெரும் பாராட்டும் வாழ்த்தும் தெரிவிக்கப்பட்டது.

சிறந்த கதைகள், கட்டுரைகள் மற்றும் பொழுதுபோக்கு அம்சங்களைக் கொண்டுள்ளதால் மாணவர்கள் மட்டுமின்றி குடும்பத்தினர் அனைவரின் பாராட்டையும் சிங்கப்பூர் அம்புலிமாமா பெறும் என்று பல தலைவர்கள் கூறியுள்ளனர்.

'சிங்கப்பூர் அம்புலிமாமா'வுக்கு உலகின் பல பகுதிகளில் இருந்தும் பாராட்டுக்கள் வந்தவண்ணம் உள்ளது. அவற்றில் இந்திய குடியரசுத் தலைவர் மேதகு டாக்டர். ஏ.பி.ஜே. அப்துல் கலாம் அவர்களின் வாழ்த்துச் செய்தி பெருமிதம் அளிக்கிறது.

''நான் அம்புலிமாமாவின் வெளிநாட்டுப் பதிப்பைப் பார்த்தேன்... படித்தேன்... குறிப்பாக 'ஒரு மாணவனின் படைப்பு' மற்றும் ***'Make your own Barometer'*** கட்டுரைகள் என்னைக் கவர்ந்தன. மனமார்ந்த வாழ்த்துக்கள்!'' என்று அவர் வாழ்த்துச் செய்தியில் கூறியிருப்பதை உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் மகிழ்ச்சியடைகிறோம்.


## Statement about Ownership of CHANDAMAMA (Tamil)

Rule 8 (FormVI), Newspaper (Central) Rules, 1956

| | |
|---|---|
| 1. Place of Publication | 82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 2. Periodicity of Publication | MONTHLY<br>1st of each calendar month |
| 3. Printer's Name | B. VISWANATHA REDDI |
| Nationality | INDIAN |
| Address | 82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 4. Publisher's Name | B. VISWANATHA REDDI |
| Nationality | INDIAN |
| Address | 82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 5. Editor's Name | B. VISWANATHA REDDI<br>(Viswam) |
| Nationality | INDIAN |
| Address | 82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 6. Name and Address of individuals who own the paper | Chandamama India Ltd.<br>Board of Directors:<br>1. P. Sudhir Rao<br>2. Vinod Sethi<br>3. B. Viswanatha Reddi<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |

*I,* **B. Viswanatha Reddi,** *do hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

1st March 2003 (Sd.) B. VISWANATHA REDDI
*Publisher*



# கலவரம் மூளும் விதம்!

ஞானேஸ்வரன் என்ற யோகி தம் சீடன் குணசீலனுடன் ஊர்ஊராகச் சென்று கொண்டிருந்தார்.

ஒருநாள் இருட்டியபோது ஒரு கிராமத்தை அடைந்தார்கள். அங்கு அவர்கள் யாரோ ஒருவனின் வீட்டுத் திண்ணையில் படுத்து இளைப்பாற லானார்கள். அந்த வீடு பாலுசாமி என்ற விவசாயிக்குச் சொந்தமானது.

அன்று விடியும் வேளையில் நாகசாமி என்ற விவசாயி தான் கொண்டு வந்த ஏரை சுவர் ஓரமாக நிறுத்தினான். பிறகு கதவைத் தட்டி பாலுசாமியைக் கூப்பிட்டான்.

பாலுசாமி கண்விழித்து எழுந்து வந்ததும் நாகசாமி, ''பாலு! என் வேலையை நீ கொடுத்த ஏரால் முடித்துவிட்டேன். உன் ஏரையும் கொண்டு வந்து வைத்துவிட்டேன். நீ செய்த உதவிக்கு மிக்க நன்றி!'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

சற்று நேரத்தில் சூரியோதயம் ஆகி நன்கு வெளிச்சம் படர்ந்தது. அப் போது பாலுசாமி எழுந்து வந்து திண்ணை ஓரத்தில் நாகசாமி வைத்து விட்டுப் போன ஏரைப் பார்த்தான்.

அதன் முனை உடைந்திருப்பது கண்டு பாலுசாமி ''இந்தப் பயல் நாகசாமி இருட்டில் உடைந்த ஏரை வைத்துவிட்டு என்னை ஏமாற்றவா பார்க்கிறான்! அவனை விட்டேனா, பார்!'' என்று கறுவிக் கொண்டே நாகசாமியின் வீட்டை அடைந்து வாசலில் நின்றவாறே, ''ஏய் நாகா! வெளியே வா! என்னையா ஏமாற்றி னாய்? என் ஏரை உடைத்துவிட்டு இருட்டோடு இருட்டாக அதைக் கொண்டு வந்து என் வீட்டுத் திண் ணையில் வைத்துவிட்டு அதுபற்றி எதுவுமே என்னிடம் கூறாமல் வந்து விட்டாயே! இதென்ன ஏமாற்று வேலை?'' என்று கோபத்தோடு கத்தினான்.

நாகசாமி வெளியில் வந்து ''நான்

- சிவனார் செல்வன் -

ஒன்றும் உன்னை ஏமாற்றவில்லை. உன் ஏரையும் உடைக்கவில்லை. நீதான் அநியாயமாகப் பொய் சொல்கிறாய்,'' என்றான்.

அதுகேட்டு பாலுசாமி, ''ஏய் நாகா! நானா பொய்யன்? நீதான் அண்டப் புளுகன்'' என்றான். அதைக் கேட்ட நாகசாமி கோபம் கொண்டு ஓங்கி அறைய, பதிலுக்கு பாலுசாமி அவனை உதைத்தான்.

உடனே நாகசாமி, ''ஐயோ! பாலுசாமி என்னைக் கொல்கிறானே! இதைக் கேட்பார் யாரும் இல்லையா?'' என்று உரக்கக் கூவினான். அவன் கூக்குரலைக் கேட்ட அக்கம் பக்கத்தவர்கள் தடி, கத்தி எனக் கைக்குக் கிடைத்தவற்றை எடுத்துக் கொண்டு ஓடிவந்து பாலுசாமியைத் தாக்கத் தொடங்கினார்கள்.

பாலுசாமியும் தன் சகோதரர்களையும் உறவினர்களையும் உதவிக்கு வரும்படி உரத்த குரலில் கூவி அழைத்தான். அவர்களும் வந்து சேரவே, இரு கோஷ்டியினரும் சண்டையிட்டுக் கொண்டார்கள்.

இதைக் கண்ட ஞானேஸ்வரனும் அவரது சீடன் குணசீலனும் ஓடி வந்து இரு கோஷ்டியினர் மத்தியில் நின்று, ''சண்டையை நிறுத்துங்கள். ஏன் காரணம் இல்லாமல் வீணாகச் சண்டை போடுகிறீர்கள்?'' என்று கேட்டார்கள்.

பாலுசாமியும், ''நாங்கள் ஒன்றும் வீணாகச் சண்டை போடவில்லை. காரணத்தோடுதான் சண்டை போடுகிறோம். இந்த நாகசாமி தன் நிலத்தை உழுவதற்காக என் ஏரை வாங்கிக் கொண்டு போனான். அதை உடைத்து



திருப்பிக் கொடுக்கும்போது நான் பார்க்கமாட்டேன் என்று இருட்டில் என் வீட்டில் வைத்துவிட்டுப் போய் விட்டான். காலையில் நான் எழுந்து போய்ப் பார்த்தபோது ஏர் உடைந் திருப்பது தெரிந்தது. அதை இவன் எனக்குத் தெரிவிக்காமல் ஏமாற்றி, அதுபற்றிக் கேட்டபோது அடித்து விட்டான்,'' என்று கூறினான்.

நாகசாமியும், ''இவன் பொய் சொல்கிறான். இவனது ஏரை நான் உடைக்கவில்லை. இவன் கொடுத்தது போலவே பழுதில்லாமல் இவனது வீட்டுத் திண்ணையில் வைத்து விட்டு இவனிடம் சொல்லிவிட்டுத் தான் போனேன்,'' என்றான். பாலு சாமியோ, ''என் ஏரை உடைத்து விட்டு ஒரேயடியாக இல்லை என்று சாதிப்பதைப் பாருங்கள்!'' என்று உறுமினான்.

ஞானேஸ்வரனும், ''நீங்கள் இரு வர் சொல்வதும் உண்மையே. நாக சாமி ஏரைக் கொண்டு வந்து வைத்த போது அது ஒடிந்திருக்கவில்லை. ஆனால் அவன் போன சற்று நேரத் திற்குப் பின் அங்கு வந்த ஒரு முரட்டுக்காளை பாலுசாமியின் வீட் டுத் திண்ணையில் சாய்த்து வைக்கப் பட்டிருந்த ஏரை முட்டிவிட்டுச் சென்றது. இதை நானும் என் சீடனும் பார்த்தோம். அந்தக் காளை தான் ஏரை உடைத்திருக்கிறது. இதை அறியாமல் வீணாகச் சண்டை போட்டுக் கொண் டீர்களே!'' என்றார்.

அதுகேட்டு பாலுசாமியும் நாக சாமியும், ''ஓ! இப்படியா நடந் திருக்கிறது? இதை அறியாமல் சண்டை போட்டோமே! எல்லோரும் எங்கள் இருவரையும் மன்னியுங் கள்!'' என்று கூட்டத்தவரிடமும் யோகியிடமும் அவரது சீடரிடமும் கைகூப்பி வணங்கி மன்னிப்பு கோரினார்கள்.

ஞானேஸ்வரரும், ''இதுபோலத் தான் தீர விசாரித்துத் தெரிந்து கொள்ளாமல் மக்கள் கலவரங்களில் ஈடுபடுகிறார்கள். எதையும் நன்கு ஆலோசித்தால் உண்மை புலப்படும். இனியாவது எதையும் நன்கு யோசித் துப் பார்த்துவிட்டுச் செயல்படுங் கள்!'' என்று அறிவுரை கூறிவிட்டுச் சென்றார்.





# கோட்டைத் தாண்டு!

முருகய்யன் வீடு அவனது தேவையைவிடச் சற்றுப் பெரியது. அதனால் அவன் தன் வீட்டின் முன் பக்க அறையை சேகர் என்ற இளைஞனுக்குச் சொற்ப வாடகையில் கொடுத்திருந்தான். சேகர் சாதாரண குடும்பத்தில் பிறந்தவன். ஒரு கடையில் வேலை செய்து மாதச் சம்பளம் பெற்று வருபவன். அவனுக்குக் கிடைத்த சம்பளப் பணம் அவனுக்குப் போதும் போதாததுமாகத்தான் இருந்தது. எப்படியோ ஒரு வேளை, அரை வேளை எனச் சாப்பிட்டு நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தான்.

முருகய்யனும் அவன் மீது பரிதாபப்பட்டு அவ்வப்போது சேகருக்கு உணவு அளித்தும் சிறு உதவிகளை செய்தும் வரலானான். இதைக் கண்ட முருகய்யனின் மாமா பொன்னய்யன், ''இதோ பார் முருகய்யா! நீ இப்படியே சேகருக்கு உதவி செய்து கொண்டே இருந்தால் அவனுக்கு இன்னமும் அதிகமாகச் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணமே தோன்றாது. நாளடைவில் எதற்கும் உன்னையே எதிர்பார்த்து முழுச் சோம்பேறியாக ஆகிவிடுவான். அதனால் நீ அவனுக்கு இனிமேல் உதவாதே!'' என்று கூறினான்.

முருகய்யன் தன் மாமனிடம் மிகவும் மதிப்பு வைத்திருந்தான். ஏனெனில் அவனைப் படிக்க வைத்து வாழ்க்கையில் முன்னேறச் செய்தவனே அவனது மாமா பொன்னய்யன் தான். எனவே அவன் தன் மாமா கூறியதை மௌனமாகக் கேட்டுக் கொண்டான்.

இப்படி இருக்கையில் ஒருநாள் பொன்னய்யன் தன் நண்பனின் வீட்டுத் திருமணத்தில் கலந்து கொள்ள வெளியூர் சென்றான். முருகய்யனும் ஏதோ வேலையாக ஊருக்குள் போய் விட்டு மாலையில் தான் தன் வீட்டிற்கு வந்தான்.

அப்போது சேகரின் அறையில் இருந்து அவன் முனகும் சத்தத்தைக்

- கௌரிநாதன் -

கேட்டு முருகய்யன் அந்த அறைக்குள் சென்றான்.

அங்கு சேகர் நன்கு போர்த்திக் கொண்டு பாயில் படுத்திருப்பதை அவன் கண்டான். அவன் முக்கி முனகி 'அம்மா' 'அம்மா' என்று அரற்றுவதைக் கேட்டு முருகய்யன் அவனருகே போய் ''சேகர்! என்ன வேண்டும்?'' என்று கேட்டான். சேகரும் ''காய்ச்சலாக இருக்கிறது. எதுவும் வேண்டாம். ஓரிரு நாட்களில் சரியாகிவிடும்,'' என்றான்.

முருகய்யன் அப்போதே அவனுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து உதவலாமா என்று எண்ணினான். ஆனால் அடுத்த விநாடியே மாமன் பொன்னய்யன் செய்த எச்சரிக்கை நினைவிற்கு வந்தது. எனவே சேகரிடம், ''சரி. உன் இஷ்டம் போலவே செய்!'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்றான்.

மூன்று நாட்கள் க்ழிந்தன. அப்போதும் சேகரின் உடல்நிலை திருந்தவில்லை. நான்காவது நாள் சேகர் வேலை செய்யும் கடையின் சொந்தக்காரர் சொக்கலிங்கம் அவனைப் பற்றி விசாரிக்க அவனது அறைக்கு வந்தார். அங்கு சேகர் படுத்திருப்பதைப் பார்த்துப் பதறிப் போய், அவர் அவனது உடலைத் தொட்டுப் பார்த்து முருகய்யனிடம், ''நல்ல ஆளய்யா நீர்! ஒரு மனிதன் உயிர் போகும் நிலையில் இருக்கும் போது அவனைக் காப்பாற்ற வேண்டாமா? நான் சேகரை அழைத்துக் கொண்டு போய் வைத்தியரிடம் காட்டுகிறேன்,'' எனக் கூறி சேகரை எழுப்பி கைத்தாங்கலாக நடத்திக் கூட்டிக் கொண்டு சென்றார்.

அதே சமயம் ஊர் திரும்பிய பொன்னய்யன் சேகரை சொக்கலிங்கம் கூட்டிக் கொண்டு போவதைப் பார்த்துவிட்டு, முருகய்யனிடம் என்ன விஷயம் என்று கேட்டான். முருகய்யனும் நடந்ததைக் கூறவே, பொன்னய்யனும் ''அறிவுரைகளைப் புரிந்து கொண்டு சந்தர்ப்பத்திற்கு ஏற்ப செயல்பட வேண்டும். அப்படி நீ நடந்து கொள்ளாதது உன் தவறே. இனியாவது புரிந்து கொண்டு நட!'' என்றான். முருகய்யனுக்கும் இனி தான் எவ்வாறு நடக்க வேண்டும் என்பது புரிந்தது!





# மர்மக் குளம்

## 13

*(ஜெயசீலனும் சித்தசாதகனும் அப்பகுதியில் மகரகேதுவைப் பார்த்தார்கள். அவனுடன் தன் இளம்பிராய நண்பனான தேவசர்மாவையும், சேனாதிபதியின் மகனான மங்களவர்மனையும் கண்டு ஜெயசீலன் ஆச்சரியப்பட்டான். சித்தசாதகன் நீர் யானையிடமிருந்து மனிதக் குரங்கைக் காப்பாற்றித் தன் வாகனமாக ஆக்கிக் கொண்டான். அதன் பிறகு)*

மனிதக் குரங்கைத் தான் சொன்ன படி எல்லாம் செய்யச் சொல்லி சித்தசாதகன் ஆட்டி வைக்கவே அது கண்டு எல்லோரும் ஆச்சரியப் பட்டார்கள். ஜெயசீலனும் ''அடே யப்பா! இந்த பயங்கரக் குரங்கை சித்தசாதகன் அடக்கித் தன் வாகனமாக ஆக்கிக் கொண்டுவிட்டது மாபெரும் அதிசயமே. கிருபாணஜித்தனைக் கொன்றது. சர்ப்பஸ்வரனைக் கவர்ந்து சென்றது. ஆனால் அவன் எப்படி இதனிடமிருந்து தப்பி ஓடினான் என்பது தான் புரியவில்லை,'' என்றான்.

மகரகேது அப்போது ''நான் தான் அவனை இதனிடமிருந்து காப்பாற்றினேன்,'' என்றான். ஜெயசீலன் அவனை ஒருமுறை உற்றுப் பார்த்து விட்டு ''நீ படுகாயம் அடைந்திருந்தாயே. அது ஆறிவிட்டதா?'' என்று கேட்டான். மகரகேதுவும் தேவசர்மாவைச் சுட்டிக்காட்டி ''இவர் தாம் அந்த காயங்களைக்



குணப்படுத்தி எனக்கு உயிர்ப்பிச்சை அளித்தார். இவரை நான் மர்மக் குளத்திற்கு அழைத்துச் சென்றேன். இப்போது அங்கிருந்து தான் திரும்பி வந்திருக்கிறோம்,'' என்றான்.

ஜெயசீலன் தேவசர்மாவைப் பார்த்து, ''ஆகா! நான் உன்னைப் பார்த்து எவ்வளவு வருடங்களாகி விட்டது! இந்த மங்களவர்மன் உன் சீடனா?'' என்று கேட்டான். தேவ சர்மாவும், ''ஆமாம், ஜெயசீலா! இவனுக்கும் மர்மக் குளத்திற்குப் போக வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. ஆனால் பாவம் என்ன செய்வான்! தன் மரக்காலைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டே இருக்கிறான்,'' என்றான்.

அப்போது ஆகாயத்தில் பல பறவைகள் சிறகுகளைப் 'படபட' வென்று அடித்துக் கொண்டு பறந்து செல்வதைக் கண்ட மகரகேதுவும், சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும், ''மர்மக்குள மகேஸ்வரா! போற்றி, போற்றி!!'' என ஒரே சமயத்தில் கூவி பயபக்தியுடன் அவற்றை வணங்கி னார்கள். அப்பறவைகள் அந்த கோஷத்தைக் கேட்டு தாம் சுமந்து கொண்டு சென்று கொண்டிருந்த ரதத்தை உடனே கீழே இறக்கின. ரதம் நதிக்கரையில் இறங்கியது.

மகரகேதுவும் மற்ற இருவரும் அந்தத் தேர் இறங்கிய இடத்திற்கு ஓடி அதனுள் பார்த்தார்கள். அவர்கள் எண்ணியபடி மர்மக்குள மகேஸ் வரன் அதில் இல்லை. அவனது தேரோட்டி மட்டும் அதில் இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

ஜெயசீலன், சித்தசாதகன், தேவ சர்மா, மங்களவர்மன் ஆகிய நால்வர் மட்டும் இப்போது மகரகேதுவிட மிருந்தும் அவனது ஆட்களிட மிருந்தும் பிரிக்கப்பட்டுவிட்டனர். அப்போது ஜெயசீலன் மங்கள வர்மனிடம், ''மங்களா! நீயும் நானும் பகைவர்களல்லவே. உன்னைப் பார்த்தால் நீ மர்மக் குளத்திற்குப் போய்விட்டு வந்தவனைப் போலத் தெரிகிறது. அங்கு அரசகுமாரன் காஞ்சனவர்மனையும் அரசகுமாரி காஞ்சனமாலையையும் கண் டாயா?'' என்று கேட்டான். மங்கள வர்மனோ பெருமூச்சுவிட்டவாறே தேவசர்மாவைப் பார்த்து, ''நீங்களே இதற்கு பதில் கூறுங்கள்!'' என்றான்.

ஜெயசீலனும் ''நண்பா! நீயே சொல். அரசகுமாரனும் அரசகுமாரி

யும் நலமாக இருக்கிறார்களா? நீ அவர்களைப் பார்த்தாயா?'' என்று கேட்டான்.

அப்போது சித்தசாதகன் ''இவர் உன் நண்பரா? இதுவரை நீ என்னிடம் சொல்லவே இல்லையே?'' என ஆச்சரியப்பட்டவாறே கேட்டான். ஜெயசீலனும் புன்னகை புரிந்தவாறே ''ஆம்!'' என்று கூறித் தலையை ஆட்டினான். சித்த சாதகனோ ''நாம் இங்கே ஏதோ பேசிக் கொண்டிருக்கிறோம். அங்கே மகரகேதுவும் அவனது ஆட்களும் தப்பி ஓட முயன்று கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தினால் தானே அவர்களது உதவியால் மர்மக் குளத்தை அடைய முடியும்?'' என்று கூறித் தன் கவலையை வெளிப்படுத்தினான்.

ஜெயசீலனும், ''தப்பி ஓட முயல்பவர்களை இப்போது நாம் தடுத்து நிறுத்தினாலும் மறுபடியும் தப்பிச் செல்லவே முயல்வார்கள். மேலும் மகரகேது தப்பிச் செல்வது போல நடித்து நம்மை திசை திருப்ப முயற்சி செய்கிறான் என்றே தெரிகிறது. அதனால் இப்போது நாம் அவனையும் அவனது ஆட்களையும் பின்தொடராமல் இருப்போம். மர்மக் குளத்திற்குப் போக வழி தானே! அது நமக்கு எப்படியும் தெரிந்துவிடும், கவலைப் படாதே!'' எனக் கூறி தேவசர்மாவைப் பார்த்தான்.

தேவசர்மாவும், ''ஜெயசீலா! உன் நண்பன் அவசரக்குடுக்கை என்று தெரிகிறது. எதையும் நிதானமாக



யோசித்துப் பார்க்க இவனுக்குப் பொறுமை இல்லையே. மகரகேது தப்ப முயல்வது போல நடித்து உங்களைத் தன் பின்னால் வரச்செய்து உங்களை ஆற்றிலுள்ள பயங்கர முதலைகளுக்கு இரையாக்குவதே அவன் திட்டமாக இருக்கும்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன், ''ஆற்று முதலைகளுக்கா இரையாக்கி விடுவான்? என் சக்தி வாய்ந்த சூலம் ஆற்று முதலைகளை மட்டுமே அல்ல, மகரகேதுவையும் அவனது வாகனமாகிய நீர்யானையையும் குத்திக் கொன்றுவிடும்,'' என்று ஆவேசமாகப் பொரிந்து தள்ளினான்.

ஜெயசீலன் சித்தசாதகனின் ஆவேசத்தைத் தணிக்க எண்ணி தேவசர்மாவிடம், ''நாம் மங்களவர்மனை மகரகேதுவைக் கண்டு வருவதற்காக



கொள்ள வேண்டும். நானும் நீயும் நெடுங்கால நண்பர்கள் என்பதை மகரகேது தெரிந்து கொள்ளக் கூடாது. அது அவனுக்குத் தெரிந்தால் அரச குமாரியையும் அரசகுமாரனையும் மீட்க முடியாமல் போய்விடும்,'' என்றான்.

சித்தசாதகனும் ''நான் எச்சரிக்கை யாகவே இருக்கிறேன். தப்பி தவறிக் கூட இதை நான் அவனுக்குத் தெரி விக்க மாட்டேன்,'' என்றான். தேவ சர்மனும், ''மர்மக் குளத்திலுள்ள ஜல விருட்ச ராட்சஸனை முதலில் கொல்ல வேண்டும். இவன் யார் தெரியுமா சாதகா? நீ வழிபட்டு வரு கிறாயே மகாகாலன். அவனுடைய ஜென்ம விரோதி,'' என்றான்.

அனுப்பலாமா?'' என்று கேட்டான். தேவசர்மாவும், ''ஆகா, அனுப்ப லாமே! மங்களா! நீ போய் அந்த ரதத்தில் ஏன் தேரோட்டி மாத்திரம் வந்தான் என்பதை அறிந்து வா!'' என்று கூறவே, மங்களவர்மனும் அவ்னை வணங்கிவிட்டுச் சென்றான். அவன் போனதுமே ஜெயசீலன், ''தேவசர்மா! இப்போது அரச குமாரனையும் அரசகுமாரியையும் பற்றிய விவரங்களைக் கூறு!'' என்று சொன்னான்.

தேவசர்மாவும், ''அவர்கள் பத்திர மாக இருக்கிறார்கள். ஆனால் வேடிக் கையைப் பார். அந்த மர்மக்குள மகேஸ்வரன் தான் ஏன் அவர்களைக் கவர்ந்து வந்தான் என்று மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருக் கிறான். ஒரு விஷயத்தை இந்த சித்தசாதகன் நினைவில் வைத்துக்

சித்தசாதகனும் ''அப்படியா? என் திரிசூலம் அவனை ஒழித்துவிடும்,'' என்றான். அப்போது தேவசர்மா தன் கையிலிருந்த நவரத்தினங்கள் பதிக் கப்பட்ட மந்திரத் தடியை எடுத்து சுழற்றி ஆற்றைச் சுட்டிக்காட்டி, ''மர்மக்குள மகேஸ்வரனின் ரதம் அவனது மெய்க்காப்பாளனான தேரோட்டியுடன் மட்டும் வந்திருக் கிறது என்றால் மர்மக் குளத்தில் ஏதோ விபரீதம் நடந்திருக்க வேண் டும் என்றே நினைக்கிறேன். அதோ மங்களவர்மன் வருகிறான். அவன் பின்னால் மகரகேது தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வருகிறான். என்ன விஷயம் என்று விசாரித்துத் தெரிந்து கொள்வோம்,'' என்றான்.

மகரகேது தேவசர்மாவிடம்,

''என்ன சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை. மர்மக்குள மகேஸ் வரனை ஜல விருட்ச ராட்சஸர்கள் திடீரென்று தாக்கினார்கள். அவர் களிடமிருந்து தப்ப நம் மகேஸ்வரன் அரசகுமாரன் காஞ்சனவர்மனையும் அரசகுமாரி காஞ்சனமாலையையும் அந்த ரதத்தில் ஏற்றித் தன் மெய்க் காப்பாளனை விரைவாக ரதத்தைச் செலுத்தும்படிக் கூறினான். பறவை கள் அந்த ரதத்தை ஆகாயத்தில் உயரக் கொண்டு போயின. ஆனால் ஒரு கழுகுக் கூட்டத்தைக் கண்ட பறவை கள் பயந்து ரதத்தைக் கவிழ்க்கவே, மகேஸ்வரனும் அரசகுமாரனும் அரசகுமாரியும் ரதத்திலிருந்து ஏதோ ஒரு காட்டிற்குள் விழுந்துவிட்டார் கள். தேரோட்டி ரதத்தை மட்டுமே காப்பாற்றி இங்கே கொண்டு வந்து இறக்கி இருக்கிறான்,'' என்றான்.

இதைக் கேட்ட தேவசர்மாவும், ஜெயசீலனும், சித்தசாதகனும் திகைத்து நின்றார்கள். ஜெயசீலனும், ''இனிமேல் எனக்கு இந்த வாள் எதற்கு? இவ் வளவு நாட்களாக நான் பட்ட கஷ்டங்களும் சிரமங்களும் வீணாகிவிட்டனவே! மிகவும் உயரத் தில் இருந்து தரை மீது விழுந்த அரச குமாரியும் அரசகுமாரனும் உருத் தெரியாமல் போயிருப்பார்களே!'' எனக் கூறித் தன் இடைவாளை உறை யிலிருந்து உருவி தூர எறிந்தான். தேவசர்மாவும் தன் கைத்தடியால் தரை மீது ஓங்கி ஓர் அடி கொடுத்தான்.

அப்போது சித்தசாதகன், ''ஏன் இப்படி மனம் தளர்ந்து போய்விட் டீர்கள்? இப்போது என்ன நடந்து விட்டது? ரதத்திலிருந்து விழுந்தவர் கள் எந்தப் புதர் மீதோ அல்லது மரக் கிளைகளிடையோ சிக்கி அதிக காயப்



படாமல் உயிர் தப்பி இருக்கலாம் அல்லவா? அவர்கள் இறந்து போய் விட்டார்கள் என்ற முடிவுக்கு ஏன் வரவேண்டும்? நாம் அவர்களைத் தேடிக் கண்டு பிடிப்போம். ஜல விருட்சராட்சஸர்களை ஒழிப்போம். அந்த மர்மக் குளம் இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும், ''சித்தசாதகா! நீ அப்படியா நினைக்கிறாய்? ஆகா யத்திலிருந்து தரை மீது யார் விழுந் தாலும் மரண காயம்பட்டு இறந்து தானே போவார்கள். இதற்கு அரச குமாரனும் அரசகுமாரியும் விதி விலக்கா? இல்லை. அவர்கள் இறந்து தான் போயிருப்பார்கள்,'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினான்.

சித்தசாதகனோ, ''இல்லை. இம் மாதிரி ஆபத்துகளிலிருந்து எவ் வளவோ பேர்கள் தப்பி உயிருடன் இருந்திருக்கிறார்கள். நாம் ஏன் நம் பிக்கையை இழக்க வேண்டும்? அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள் என்றே எண்ணுவோம். அவர்களைத் தேடியும் பார்ப்போம். அவர்கள் இறந்து போயிருப்பார்கள் என்று எண்ணி கைகட்டிக் கொண்டு எதுவும் செய்யாதிருப்பதில் எவ்விதப் பய னும் இல்லை,'' என்றான்.

ஜெயசீலன் சற்று நேரம் எதுவும் பேசாமல் இருந்தான். பிறகு அவன் தேவசர்மாவைப் பார்த்து, ''நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

தேவசர்மாவும், ''ஜெயசீலா! இப் போது நாம் தாம் அவசரப்பட்டு ஏதேதோ எண்ணிவிட்டோம். சித்த சாதகன் கூறியது போல அவர்கள் பிழைத்திருக்கலாம். நாம் தேடிப் பார்ப்போம்,'' என்றான். அப்போது நதிக்கரையிலிருந்து ''ஐயோ! ஜல ராட்சஸர்கள்! ஜல ராட்சஸர்கள்!!'' என்ற குரல்கள் ஒலித்தன. உடனே அவர்கள் குரல் வந்த திக்கில் நதியைப் பார்த்தார்கள். ஆற்றின் நடுவிலிருந்து ஓநாய்த் தலை கொண்ட ஜல ராட் சஸர்கள் நீந்திக் கொண்டு கரையோர மாக இருந்த ரதத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். *(தொடரும்)*



நவீன வேதாளக் கதை

# அதிகாரிகள் மாற்றம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் நீ இப்படி சிரமப்பட்டு விடாது முயற்சி செய்வதைப் பார்த்தால் உனக்கு ஏதோ சிக்கலான பிரச்சினை இருப்பதாகத் தெரிகிறது. உன்னைப் போல பிரதாபசேனன் என்ற மன்னனும் இரு அதிகாரிகளால்



கஷ்டங்களை அனுபவிக்க வேண்டிய தாயிற்று. அவன் கதையைக் கூறு கிறேன், கவனமாகக் கேள்'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

காஞ்சனக் கோட்டையை பிரதாப சேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் மக்களின் நலனில் மிகவும் அக்கறை கொண்டவன். மக்கள் நிலை பற்றி அறிய அவனே மாறுவேடத்தில் போய் கண்டு வரு வதை வழக்கமாகக் கொண்டான். ஒற்றர்கள் வாயிலாகவும் மக்களின் அபிப்பிராயங்களை அறிந்து வந்தான்.

ஒருமுறை அவன் தன் நாட்டில் பாக்கியபுரம் என்ற நகருக்கு மாறு வேடத்தில் சென்றான். அந்நகர அதிகாரி தேவதத்தனை எல்லோரும் புகழ்வதையும், அவனது நிர்வாகத் தில் அவ்வூர் எல்லா வசதிகளையும் பெற்று எவ்வித பயமும் இல்லாது இருக்கிறார்கள் என்று யாரைக் கேட்டாலும் சொல்வதையும் கேட்டு வியந்தான். பரதேசி போல வேடம் அணிந்து வந்த அவன் தான் கேட்டது உண்மைதானா என்று பரீட்சித்துப் பார்க்க விரும்பினான்.

நகர் முழுவதும் சுற்றிவிட்டு அவன் ஒரு சத்திரத்தில் ஓர் அறையில் தங்கினான். அவன் அந்த சத்திர நிர்வாகியிடம் ''ஐயா! இன்றிரவு ஒரு முக்கியமான வேலையாக ஒருவரைச் சந்திக்க வந்திருக்கிறேன். என்னிடம் பத்தாயிரம் வராகன்கள் உள்ளன. அதை என்னோடு இரவு வேளையில் எடுத்துப் போக விரும்பவில்லை. அந்தப் பணப் பையை உங்களிடம் கொடுக்கிறேன். நீங்கள் அதை வைத் திருந்து நான் திரும்பி வந்ததும் கொடுக்கறீர்களா?'' என்று கேட்டான்.

சத்திர நிர்வாகியும் ''நீங்கள் இந்த ஊரில் எதற்கும் பயப்பட வேண் டாம். நீங்களே பணத்தை எடுத்துக் கொண்டு இரவில் எங்கே வேண்டு மானாலும் போகலாம் அல்லது உங்கள் அறையிலேயே பணத்தை வைத்துவிட்டும் போகலாம். யாரும் அதைத் தொடக் கூட மாட்டார்கள்,'' என்றான். அவனும், ''சரி, அப்படி யானால் பணத்தை என்னுடனேயே எடுத்துச் செல்கிறேன்,'' எனக் கூறிப் பணப் பையைக் கையில் எடுத்துக் கொண்டு சத்திரத்தைவிட்டு வெளியே சென்றான். அவன் பல தெருக்களில் சென்றபோது தெரு



விளக்குகள் பிரகாசமாக இருப்பதையும் தெருக்களில் குப்பை கூளங்கள் என்று கிடக்காமல் சுத்தமாக இருப்பதையும் கண்டான்.

இப்படியே இரவு வெகு நேரமாகிவிட்டது. ஆங்காங்கே நகரக் காவல் வீரர்கள் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள். பல மருத்துவமனைகள் அந்த வேளையிலும் ஆபத்தான நிலையில் உள்ளவர்களுக்கும் உதவத் திறந்தே இருந்தன. இவ்வளவு திறம்பட நகரை நிர்வகிக்கும் அதிகாரி தேவதத்தனை அவன் மனதிற்குள்ளேயே பாரட்டிக் கொண்டான்.

அவன் தன் பண மூட்டையைத் தெருவில் போட்டுவிட்டு நடக்கலானான். அப்போது ஒரு காவல் வீரன் அந்த மூட்டையை எடுத்துக் கொண்டு ஓடி அவனிடம் வந்து ''ஏனப்பா உன் மூட்டையைத் தெருவில் போட்டாய்? இதில் என்ன இருக்கிறது?'' என்று கேட்டான். மாறுவேடத்திலிருந்த மன்னனோ, ''அது என் மூட்டை. அதில் என்ன வேண்டுமானாலும் இருக்கும். அதை நான் எங்கே வேண்டுமானாலும் போடுவேன். அதை எல்லாம் கேட்க நீ யார்?'' என்று வேண்டும் என்றே திமிராகக் கேட்டான்.

காவல் வீரனோ ''நான் நகரைப் பாதுகாக்கும் காவல் வீரர்களில் ஒருவன். இந்த மூட்டையில் மக்களுக்கு தீங்கு இழைக்கும் விஷம் இருக்கிறதா?'' என்று சற்றுக் கடுமையாகக் கேட்டான். மன்னனோ பதில் சொல்லாமல் ஓடவே காவல் வீரன் அவனைத் துரத்தினான். வேகமாக ஓடிய மன்னன் கால் இடறிக் கீழே விழுந்து பலமான காயம் பட்டுத் தன் நினைவை இழந்து விட்டான். காவல் வீரன் குரல் கொடுத்து சில வீரர்களை அங்கு கூட்டிவிட்டான்.

நினைவு இழந்து விழுந்துகிடந்த மன்னனை யாரோ பரதேசி என்று அலட்சியப்படுத்தாமல் அவர்கள் அவனைத் தூக்கிக் கொண்டு போய் மருத்துவமனையில் சேர்த்தார்கள். மருத்துவர்களும் சற்றும் தாமதிக்காமல் உடனே அவனது உடல் நிலையைப் பரிசோதித்து மருந்துகள் கொடுத்து காயத்திற்கும் கட்டுப் போட்டார்கள்.

மன்னனுக்குத் தன் நினைவு வந்ததும் ''ஒரு சர்வ சாதாரண மனிதனைக் கூட இந்த ஊரில் மிக நன்றாக

கவனித்துக் கொள்கிறார்கள். இப்படி நகரை நன்கு நிர்வகிக்கும் அதிகாரி தேவதத்தனை நான் பார்க்க வேண்டுமே!'' என்றான்.

வீரர்கள் உடனே நகர நிர்வாக அதிகாரிக்குத் தகவல் கொடுக்கவே, அவனும் மருத்துவமனைக்கு வந்து மன்னனான நோயாளியைப் பார்த்தான். அவனிடம் பணமூட்டையை ஏன் தெருவில் போட்டீர்கள் என்று தேவதத்தன் கேட்டான்.

அப்போது மன்னன், ''நான் பரதேசி அல்ல. இந்த நகரின் நிர்வாகம் எப்படி இருக்கிறது என நேரில் காண மாறுவேடத்தில் வந்துள்ள இந்நாட்டு மன்னன் நான். இங்கு எல்லாம் முறைப்படி நன்கு இருப்பது கண்டு முழுத் திருப்தி அடைகிறேன். இதற்காக உன்னைப் பாராட்டுகிறேன்,'' என்றான். அப்போது தேவதத்தன் மன்னனைப் பணிவுடன் வணங்கி ''அரசே! என்னைப் பரீட்சிக்க இவ்வளவு சிரமங்களை மேற்கொண்டிருக்கறீர்களே!'' எனக் கூறி நின்றான். மன்னன் மீண்டும் ஒரு முறை தேவதத்தனைப் பாராட்டிவிட்டுத் தலைநகருக்குச் சென்றான்.

தலைநகரை அடைந்த மன்னன் தேவதத்தனை அங்கு வரச் சொல்லி அவனைப் பாராட்டி கௌரவித்துப் பரிசுகளை அளித்தான்.

இதனால் மற்ற அதிகாரிகளும் மன்னனின் பாராட்டுகளையும் பரிசுகளையும் பெற தம் பணிகளில் அதிக ஈடுபாடுகளைக் காட்டினார்கள். ஆனால் மதுபுரம் என்ற ஊரின் அதிகாரி பூபதி மட்டும் வேலை எதுவும் செய்யாமல் உடனேயே பரிசுகளைப்



பெற விரும்பினான். பூபதி ராணியின் தூரத்து உறவினன். அவனுக்கு நிர்வாக அதிகாரி வேலை கூட தகுதியின் அடிப்படையில் அல்லாமல் ராணியின் சிபாரிசின் பேரில் தான் கிடைத்தது.



தான் மன்னனிடம் எதையும் கேட்டுப்பெற ராணி உதவுவாள் என்ற இறுமாப்பில் நிர்வாகத்தை சரிவரக் கவனிக்காமல் சுகபோகங்களில் ஈடு பட்டான். அதனால் அவன் ராணியைக் கண்டு ''தேவதத்தனுக்குக் கிடைத்தது போல் எனக்கும் பாராட்டுதல்களும் பரிசுகளும் இப்போதே கிடைக்க வேண்டும். அதற்கு நீதான் வழி செய்ய வேண்டும்'' எனக் கூறினான்.

ராணியும் அதுபற்றி மன்னனிடம் பேசவே, அவனும் ''அடுத்த வாரம் நான் மதுபுரம் போய் தேவதத்தனை பாக்கிய நகரத்தில் பரீட்சித்ததுபோல் உன் பூபதியையும் பரீட்சிக்கிறேன். இதை நீ மட்டும் முன் கூட்டியே அவனுக்குத் தெரிவித்துவிடாதே'' என்று எச்சரித்தான்.

ஒரு வாரம் கழிந்ததும் மன்னன் தன் பணியாள் ஒருவனுக்குப் பரதேசி வேஷம் போட்டு மதுபுரத்திற்கு அனுப்பிவிட்டுத் தான் ஒரு சாதாரண மனிதனைப்போல அவனைப் பின் தொடர்ந்து சென்றான்.

மதுபுரத்தில் பூபதி மன்னன் பாக்கியபுரத்திற்கு பரதேசி வேஷத்தில் போனது போலவே தன் ஊருக்கும் வருவான் என்று எதிர்பார்த்து காத்துக் கொண்டிருந்தான். தலைநகரிலிருந்து மதுபுரத்திற்கு வந்த பரதேசி இரவில் அவ்வூர்த் தெருக்களில் சுற்றி வந்து ஒரு தெருவில் தன் பணப்பையைப் போட்டான். உடனே ஒரு காவல் வீரன் அவனைப் பிடித்து அடித்து காயப்படுத்தி' மருத்துவமனையில் சேர்த்துவிட்டான்.

அந்தப் பரதேசியின் பின்னால் சாதாரணக் குடிமகன் போல வந்த மன்னன் அதே மருத்துவமனையில் தனக்கு விஷஜுரத்திற்கு சிகிச்சை அளிக்கக் கோரி சேர முயன்றான். வைத்தியர்கள் எல்லோரும் அந்தப் பரதேசியைத்தான் அக்கறையுடன் கவனித்தார்கள்.

மருத்துவமனை சிப்பந்தி ஒருவன், ''நீ இந்த மருத்துவமனையில் எதையும் எதிர்பார்க்காதே. இங்கே சரியாகக் கவனிக்கமாட்டார்கள்.

இங்கு உள்ளவர்களுக்கு சம்பளமே கிடைப்பதில்லை. பலர் வேலைக்காக பாக்கியபுரத்திற்குப் போய்விட்டார்கள். நீயும் அந்த ஊருக்குப் போய் ஏதாவது ஒரு மருத்துவமனையில் சேர். நல்ல சிகிச்சை பெறுவாய்,'' என்று சொன்னான்.

மன்னனும் தலைநகருக்குப் போய் ராணியிடம் நடந்ததைக் கூறி, ''உன் பூபதி திறமையற்றவன். அவனது நிர்வாகம் சரி இல்லை. அவனை பாக்கியபுரத்திற்கு மாற்றி தேவதத்தனை மதுபுரத்தின் நிர்வாக அதிகாரியாக ஆக்கிவிடுகிறேன்'' என்றான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னா, பாக்கியபுரத்தை நன்கு நிர்வகித்து வந்த தேவதத்தனை மன்னன் மதுபுரத்திற்கு ஏன் மாற்றினான்? மோசமாக நிர்வகித்த பூபதியை மன்னன் நல்ல நகரமான பாக்கிய புரத்தின் அதிகாரியாக ஏன் ஆக்கினான்? இந்த வினாக்களுக்கு சரியான விடைகள் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும், ''மன்னன் தேவதத்தனை மதுபுரத்திற்கு மாற்றியதற்குக் காரணம் அவன் அங்கு போய் நன்கு நிர்வகித்து மதுபுரத்தையும் பாக்கியபுரம் போல ஆக்கிவிடுவான் என்பதுதான். பூபதியை நல்ல நகரமாக உள்ள பாக்கியபுரத்தின் நிர்வாக அதிகாரியாக ஆக்கியது அவனை வேலையிலிருந்து நீக்க எடுத்த முதல் நடவடிக்கை. பாக்கியபுர மக்கள் நேர்மையானவர்கள். சட்டம், ஒழுங்கு முதலியவற்றை சரியாகக் கடைப்பிடிப்பவர்கள். பூபதி அங்கு தன் இஷ்டப்படி எதுவும் செய்ய முடியாமல் தவறுகளைச் செய்வான். அதனால் அவன் மீது மக்கள் மன்னனிடம் புகார் செய்வார்கள். அந்தப் புகார்களின் அடிப்படையில் அவனை வேலையில் இருந்து நீக்கிவிடலாம். இதனால் ராணியும் வருந்தமாட்டாள்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்து விடவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில ஏறிக்கொண்டது.








## தலைமுடி சமர்ப்பித்தல்!

திருப்பதிக்குப் போனால் அங்கு பெரும் பாலோரின் தலைகள் மொட்டை அடிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். இவர்கள் ஆந்திராவிலிருந்தும் தமிழ்நாட்டிலிருந்தும் அங்கு வந்து தாம் மொட்டை அடித்துக் கொள்வதாகச் செய்த பிரார்த்தனையைச் செலுத்துகிறார்கள். இவ்வாறு அவர்களது தலைமுடி வெங்கடேசுவரக் கடவுளுக்கு சமர்ப்பிக்கப்படுகிறது. இம்மாதிரிப் பிராத்தனை திருப்பதிக்கு மட்டும் அல்ல, தமிழ்நாட்டில் பல கோவில்களிலும் செலுத்துப்படுகிறது.

குறிப்பாக ஒரு வயதுக் குழந்தைகள் மொட்டை அடிக்கப்படுகின்றன. இவ்வாறு காணிக்கை போலச் செலுத்துவது அவர்கள் அக்கடவுள் மீது கொண்டுள்ள ஆழ்ந்த நம்பிக்கை. ஆண், பெண், குழந்தை யாவருக்குமே தலைமுடி அழகைக் கொடுப்பது. இதைக் கடவுளுக்கு அவர்கள் சமர்ப்பிப்பது அவர்களது பக்தியைக் காட்டுகிறது.

## மிளகோடு பிரார்த்தனை



கடவுளுக்கு மலர்கள், தேங்காய், பழம் என சமர்ப்பிப் பதை நாம் அறிவோம். இவை போல மிளகும் அர்ப்பணிக் கப்படுகிறது. வட கேரளாவின் கொடுங்கலூரில் உள்ள பத்திரகாளி அம்மனுக்கு மலர்களோடு மிளகையும் சமர்ப்பிக்கிறார்கள். காளியின் நிறம் கருப்பு. மிளகும் கருப்பு. இவ்வாறு அம்மனுக்கு மிளகை சமர்ப்பிப்பதால் பெரியம்மை நோய் வராமல் தடுத்துக் கொள்ள முடியும் என்பது அப்பகுதி மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை.

## இந்தியப் புராதனக் கதைகள் - 11

# ஆடு சிரித்து அழுதது!

பக்தி சிரத்தை கொண்ட ஒரு குரு ஒரு யாகம் செய்ய விரும்பினார். அதில் பலியிட ஓர் ஆடு தேவைப் பட்டது. அதனால் அவர் தன்னிடம் முன்பு படித்த ஒரு பணக்காரப் பண்ணையாரிடம் கேட்டு ஒரு ஆட்டை வாங்கி வரும்படித் தன் இரண்டு சீடர்களை அனுப்பினார். அவர்களும் போய் அந்தப் பண்ணை யாரைக் கேட்டு ஓர் ஆட்டை வாங்கி வந்தார்கள்.

அடுத்த நாள் யாகத்திற்கான ஏற் பாடுகள் செய்யப்பட்டன. குரு தன் சீடர்களிடம், ''நீங்கள் ஆட்டை மலை அடிவாரத்திலுள்ள ஏரிக்குக் கொண்டு போய் நன்கு குளிப்பாட் டுங்கள். பிறகு அதன் நெற்றியில் குங்குமம் வைத்தும் கழுத்தில் மலர் மாலை போட்டும் இங்கு கொண்டு வாருங்கள்!'' என்று கூறி அனுப்பி னார். அதன் பின் அவர் யாகத்திற்கான மற்ற ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்தார்.

அந்த இரு சீடர்களும் ஆட்டை ஏரிக்கு இழுத்துச் சென்றார்கள். அப்போது அவர்களோடு வேறு இரு சீடர்களும் சேர்ந்துகொண்டார்கள். அவர்கள் ஏரிக்கரையில் வளர்ந்திருந்த செடிகளிலிருந்து மலர்களைப் பறித்து மாலை கட்டினார்கள். ஆட்டை ஏரியில் குளிப்பாட்டிக் கரைக்குக் கொண்டு வந்தார்கள். அதன் பின் அவர்கள் அதற்குக் குங்குமம் வைத்து மலர் மாலையை அதன் கழுத்தில் போட்டார்கள்.

அப்போது ஒரு விசித்திரம் நிகழ்ந்



- பாரதீயன் -

தது. அந்த ஆடு சிரித்தது. அந்த சீடர்கள் அந்தச் சிரிப்பைக் கேட்டு பயந்து போனார்கள். அந்த ஆடும் தன் கண்களை உருட்டி அவர்களை உற்றுப் பார்த்தது. அவர்கள் பயந்து நடுங்கியதைக் கண்டு அது வெகுவாக ரசித்தது போலிருந்தது. சீடர்களோ எதுவும் செய்யத் தோன்றாமல் திகைத்து நின்றார்கள். அப்போது இன்னொரு அதிசயம் நிகழ்ந்தது. இந்தத் தடவை அந்த ஆடு அழுதது!

சீடர்களில் ஒருவன் உடனே அங்கிருந்து ஓடி தன் குருவைக் கண்டு அந்த அதிசய நிகழ்ச்சிகளைக் கூறினான். அதைக் கேட்ட குருவும், ''அந்த ஆட்டினுள் ஏதோ ஓர் ஆவி தான் புகுந்து அதைச் சிரிக்கவும் அழவும் செய்திருக்கிறது,'' என்றார். இந்த மாதிரி ஆவி புகுந்த ஆட்டை யாகத்தில் பலியிடுவது முறையா என்ற சந்தேகம் அவர் மனதில் தோன்றியது. உடனே அவர் அந்த சீடனுடன் ஆடு இருந்த ஏரிக்கரைக்குச் சென்றார்.

சீடனுடன் வந்த குருவையும் அந்த ஆடு கண்களை உருட்டிப் பார்த்தது. குருவும் திகைத்து நிற்கவே அவர் அதிசயப்படும் விதத்தில் அந்த ஆடு அவரிடம், ''நீங்கள் எண்ணியது சரியே. உங்களைப் போன்ற ஒருவரிடம்தான் ஆடாக இருந்தேன். இப்போது பேசுவது அந்த ஆவியே. நான் ஆடாக அவரிடம் இருந்தது முதல் தடவை அல்ல. இம்மாதிரி நான் நானூற்றுத் தொண்ணூற்று ஒன்பது தடவைகளில் ஒவ்வொரு



வரிடமும் ஆடாக இருந்து ஒவ்வொரு முறையும் யாகத்தில் பலியிடப் பட்டேன். நான் ஏன் ஒவ்வொரு முறையிலும் ஆடாகி பலியானேன் என்று தெரியுமா?'' என்று கேட்டது.

குருவும் பயந்தவாறே, ''தெரியாது. உண்மையில் நீ யார்?'' என்று கேட்டார். ஆடும், ''நான் ஆடாகப் பிறப்பதற்கு முன் பணக்காரனாக இருந்து உங்களைப் போல ஒரு யாகம் செய்து ஓர் ஆட்டை அதில் பலியிட்டேன். அதனால்தான் நான் ஆடாகப் பிறக்க வேண்டியதாயிற்று. நான் ஐநூறு முறை பலியாக வேண்டும் என்ற சாபமும் பெற்றேன். இந்த முறை பலியானால் என் சாபம் முடிவுக்கு வந்து விடும் என எண்ணி மகிழ்ந்தே சிரித்தேன்,'' என்றது.

அப்போது குரு ''சரி, நீ சிரித்த காரணம் புரிந்தது. ஆனால் நீ ஏன்

அழுதாய்?'' என்று கேட்டார். ஆடும் ''அதுவா? உங்கள் விதியை நினைத்து அழுதேன். நான் பலியானதும் நீங் களும் அடுத்து ஆடாகப் பிறந்து ஐநூறு முறைகள் பலியாக வேண் டும். இனி என்னை யாகம் நடக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்லுங் கள்,'' என்றது.

அதைக் கேட்ட குரு அந்த ஆட்டை யாகத்தில் பலியிடும் எண் ணத்தையே கைவிட்டார். அவர் அதனிடம் ''நான் உன்னை பலியிட மாட்டேன். உன்னை விட்டுவிடு கிறேன். காட்டில் நீ உன் இஷ்டப்படி திரியலாம்,'' என்றார்.

அதைக் கேட்ட ஆடு, ''நீங்கள் அப்படிச் செய்யக் கூடாது. என்னை பலியிடுங்கள். மறுபிறவியில் நான் மனிதனாக பிறப்பேன்,'' என்று வேண்டியது. குருவோ, ''முடியாது. உன்னை நான் பலியிடமாட்டேன்,'' என்று உறுதியாகக் கூறினார். அந்த ஆடோ ''இன்று நான் சாபத்திலிருந்து விடு தலை பெறும் நாள். நீங்கள் பலி யிடாவிட்டால் என்னை ஏதாவது ஒரு புலி கொன்று விடும்,'' என்றது.

இச்சமயத்தில் பயங்கரமாகப் புயல் காற்று வீசியது. ஏரிக்கரை யிலிருந்த மரங்கள் ஆடின. ஒரு சில மரங்கள் வேரோடு சாய்ந்தன. குரு வும் சீடர்களும் உயிர் தப்ப அங் கிருந்து ஓடி அருகில் இருந்த ஒரு குகைக்குள் புகுந்து கொண்டார்கள். அதே சமயம் ஆட்டை மின்னல் தாக்கவே அது இறந்து விழுந்தது.

புயல் ஓய்ந்த பின் குருவும் சீடர் களும் குகையிலிருந்து வெளியே வந்து யாகம் நடக்க வேண்டிய இடத்தை நோக்கிச் சென்றார்கள். அப்போது ஒரு சீடன் குருவிடம் ''குருவே! யாகத்தில் பலியிட வேறொரு ஆட்டை கொண்டு வர லாமா?'' என்று கேட்டான். அவரோ ''வேண்டாம். நான் ஆட்டை பலி யிடாமலேயே யாகத்தைச் செய்து முடிக்கிறேன்.'' என்றார்.





# திரும்பி வந்தது சூயிங் கம்!

சூயிங் கம் எனப்படும் ஜவ்வு மிட்டாய் வகையை சிங்கப்பூர் அரசாங்கம் இரண்டு ஆண்டுகளுக்கு முன் விற்கவும், பயன்படுத்தவும் தடை விதித்தது. ஆனால் தற்போது முழுமையாக அல்லாது போனாலும் ஓரளவு அந்தத் தடை விலக்கப்பட்டுள்ளது. சர்க்கரை இல்லாத சூயிங் கம் வைத்தியர்களால் சிபாரிசு செய்யப்பட்டால் மருந்தாகப் பயன்படுத்தலாம். இவை மருந்துக் கடைகளில் மட்டுமே கிடைக்கும். சூயிங் கம் மெல்வதால் வாய் நாற்றம் அடிக்கும் என்று இப்போதும் சிலர் நம்புகிறார்கள்.

# கடிதங்கள் எழுதிய சாதனை!



தினசரி செய்திப் பத்திரிகைகளிலும் வாரப் பத்திரிகைகளிலும் 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' என்ற பகுதியில் பலவித கருத்துக்கள் கொண்ட கடிதங்கள் வெளியிடப்படுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். இவை வாசகர்களால் எழுதி அனுப்பப்படுபவை. அப்பத்திரிகை வெளியிட்ட கருத்தைப் பற்றிய விமர்சனமோ, தங்களது துயர அனுபவங்களையோ சமுதாய, அரசாங்க அமைப்பிலுள்ள குற்றம் குறைகளையோ அல்லது அரசியல் கருத்துக்களையோ இக்கடிதங்களில் வாசகர்கள் எழுதி உள்ளதைக் காணலாம். அரசின் கவனத்தை ஈர்க்கவும் இப்பகுதியில் மக்களின் கடிதங்கள் பிரசுரிக்கப்படுகின்றன. புதுடில்லியைச் சேர்ந்த சுபாஷ் அகர்வால் என்பவர் செய்திப் பத்திரிகைகளுக்கு கடிதங்களை எழுதி அவற்றில் பிரசுரமான 1200 கடிதங்களை சேர்த்து கின்னஸ்புக்கில் உலக சாதனையாளராக இடம் பெற்றுவிட்டார்.



# தங்க முட்டை தந்தது!

கீரனூரில் கிட்டப்பா என்ற விவசாயி இருந்தான். அவனது மகன்கள் வேலனும் முருகனும் ஆவர். அவர்களுக்கு மணமாகிவிட்டது. எல்லோரும் கூட்டுக் குடும்பமாக ஒன்றாக வாழ்ந்து வந்தார்கள்.

வேலன் சுறுசுறுப்பாகச் செயல்படுபவன். முருகனோ மகா சோம்பேறி. கிழவனாகிவிட்ட கிட்டப்பா தன் நான்கு ஏக்கர் நிலத்தைத் தன் இருமகன்களுக்கும் கொடுத்து விவசாயத்தை கவனிக்கச் சொன்னான். வேலன்தான் எல்லா வயல்களுக்கும் போய் விவசாய வேலைகளைப் பார்த்து வந்தான். முருகனோ அது பற்றிக் கவலைப்படாமல் வீண் மனக்கோட்டை கட்டி வெட்டிப் பொழுது போக்கி வந்தான்.

இதைக் கண்ட முருகனின் மனைவி முத்தம்மாள் ஒரு நாள் தன் கணவனிடம், ''உங்கள் அண்ணன் அதிகாலையில் எழுந்து வேலை செய்ய வயலுக்குப் போகிறார். நீங்களோ காலையில் எட்டு மணி வரைத் தூங்குகிறீர்கள். வயல் பக்கமே போகாமல் வீணாய்ப் பொழுதைப் போக்குகிறீர்கள். நீங்களும் உழைத்தால் தானே பணம் சேரும்,'' என்றாள். முருகனோ ''இதோ பார். நான் வேலையே செய்ய வேண்டியதில்லை. எனக்கு தங்க முட்டை போடும் வாத்து கிடைக்கப் போகிறது. அதனால் நான் உழைக்காமலே லட்சாதிபதி ஆகிவிடுவேன்'' என்றான்.

முத்தம்மாளோ, ''இது பகல் கனவு. ஒரு நாளும் இப்படி நடக்கப் போவதில்லை,'' என்றாள். இதற்கு மறுநாள் முருகனைக் காண அவன் முன் பின் அறிந்திராத ஓர் இளைஞன் வந்தான். முருகன் கட்டிலில் படுத்திருந்தவாறே ''யாரப்பா நீ?'' என்று

- எஸ். சோபினி -

கேட்டான். இளைஞனும், ''என் பெயர் பழனி. நான் பக்கத்து ஊர்க் காரன். ஒரு வியாபாரத்தை முடிக்க பட்டணம் போக வேண்டும்,'' எனக் கூறி தன்னிடம் இருந்த ஒரு கூண்டைக் காட்டினான். அதில் தங்க நிறத்தில் ஒரு பெட்டைக் கோழி இருந்தது.

அதைக் கண்ட முருகன், ''அடே! தங்கக் கோழியா? இது தங்க முட்டை இடுமா?'' என்று கேட்டான். அந்த இளைஞனும், ''ஆமாம். இது தங்க முட்டை இடும். இது இட்ட தங்க முட்டையைப் பாருங்கள்!'' எனக் கூறித் தன் பையிலிருந்து ஒரு தங்க முட்டையை எடுத்துக் காட்டினான்.

முருகனும் அந்தத் தங்க முட்டையை வாங்கிப் பார்த்துவிட்டு, ''ஆமாம். தங்க முட்டைதான். சந்தேகமே இல்லை.'' என்று கூறி ஆச்சரியப்பட்டான்.

பழனியும், ''இந்தக் கோழியை எனக்கு ஒரு மந்திரவாதி கொடுத்தார். ஆனால் இதைக் கட்டிக்காக்கும் சக்திதான் என்னிடம் இல்லை. அதனால்தான் இதனை விற்கப் பட்டணத்திற்கு எடுத்துக்கொண்டு போகிறேன்'' என்றான்.

இதைக் கேட்ட முருகன், ''ஒரு கோழியை வளர்க்க அபூர்வ சக்தியா வேண்டும்? அது அப்படி என்ன சக்தியோ?'' என்று கேட்டான். அவனும், ''இந்தக் கோழி தன் எஜமானன் பயிர் செய்யும் வயலில் உள்ள தானியத்தைத் தான் கொத்தித் தின்ன வேண்டும். அப்போது தான் மாதத்திற்கு ஒரு முறை ஒரு தங்க முட்டை இடும். தினமும் கொஞ்சம் கொஞ்சமாக அந்த முட்டையின் நிறம் மாறி மாத முடிவில் அது தங்க முட்டை போடும். மற்ற நாட்களில் சாதாரண முட்டைகளைத் தான் இடும். இதனை வயலில் விட எனக்கு நிலம் இல்லை. இதனை வாங்குபவனுக்கு





விவசாய நிலம் இருக்க வேண்டும்'' என்றான்.

அப்போது முருகன் ''இதை விற்க நீ பட்டணம் போக வேண்டிய அவசியமே இல்லை. 'இதை எனக்கு விற்றுவிடு. என்னிடம் நிலம் இருக்கிறது'' என்றான். அந்த இளைஞனும் ''இதற்கு விலை எனக்கு வேண்டாம். நீங்களே உங்கள் வயலில் பயிர் செய்த தானியத்தில் ஒரு மூட்டை எனக்காக எடுத்து வையுங்கள். நான் ஆறு மாதத்திற்குப் பிறகு வந்து வாங்கிக் கொள்கிறேன். ஆனால் கோழியை மட்டும் தினமும் அதிகாலையில் நீங்கள் வயலுக்குப் போகும் போது கூட்டிக் கொண்டு போய்விட்டு மாலையில் கூட்டிக் கொண்டு வீட்டிற்கு வர வேண்டும். இதை மறந்து விடாதீர்கள்,'' என்றான்.

முருகனும் அக்கோழியை வாங்கிக் கொள்ளவே அந்த இளைஞனும் சென்று விட்டான்.

அன்றிரவே அவன் தன் அண்ணன் வேலனிடம் ''அண்ணா! நாளை முதல் நான் விடியும்போதே என் வயலுக்குப் போய் வேலை செய்யப் போகிறேன்'' என்றான். அதைக் கேட்டு வேலன் ஆச்சரியப்பட்டவாறே ''ஆகா! தாரளமாகச் செய்!'' என்றான்.

முருகன் மறுநாள் முதல் விடியற்காலையில் எழுந்து கோழியுடன் வயலுக்குப் போகலானான். நாள் முழுவதும் வேலை செய்துவிட்டு மாலையில் கோழியுடன் வீட்டிற்குத் திரும்பி வரலானான்.

இப்படியே மாதங்கள் கழிந்தன. முருகன் வயலைத் தானே உழுது, நாற்று நட்டு, பயிர் வளர்த்து, அறுவடை செய்து தானியத்தை மூட்டைகளாகக் கட்டி வீட்டிற்கும் கொண்டு வந்தான். அந்த தானியத்தை எடுத்துத் தான் கட்டிக் காத்து வரும் பெட்டைக் கோழிக்கு உணவாகப் போட்டான். அது எப்போது தங்க முட்டை இடும் என்று பார்த்துக் கொண்டே வந்தான். ஆனால் அதுவோ தினமும் சாதாரண முட்டைகளேயே இட்டது. மாத முடிவிலும் சாதாரண வெள்ளை முட்டை தான் போட்டது.

அதைக் கண்ட முருகன், ''அந்த பழனி ஏமாற்றிவிட்டானா! கோழி தங்க முட்டை போடவில்லையே!'' என்று பொருமிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் பழனியும் அவனைக்

காண வந்தான். அவனைப் பார்த்ததும் முருகன், ''என்னை நன்றாக ஏமாற்றிவிட்டாயே. உன் கோழி ஒரு தங்க முட்டை கூடப் போட வில்லையே! நான் தினமும் அதி காலையில் எழுந்து இதனுடன் வய லுக்குப் போனேன். நீ கூறியபடியே என் வயலை உழுது, உரம் போட்டு, விதை விதைத்துப் பயிர் வளர்த்தேன். நானே அறுவடை செய்து தானிய மணிகளைக் கோழிக்குப் போட் டேன். அதைத் தின்றும் கோழி தங்க முட்டை எங்கே போட்டது?'' என்று எரிச்சலுடன் கத்தினான்.

அதைக் கேட்ட பழனி பலமாகச் சிரித்து, ''நான் ஒன்றும் ஏமாற்ற வில்லை. கோழி எங்கேயாவது தங்க முட்டை போடுமா? ஆனால் நான் கொடுத்த கோழி உங்களுக்கு தங்கத் தையே கொடுத்திருக்கிறது. அதனால் தானே உங்களால் தானியம் விளை வித்து மூட்டைமூட்டையாக அடுக்க முடிந்தது. இவை எல்லாம் தங்கத் தைப் போல மதிப்புடையதுதானே!'' என்று கேட்டான்.

முருகன் திகைத்து நின்றான். அந்த இளைஞனும், ''எனது கோழி உங் களது சோம்பலை விரட்டி அதி காலையில் எழச் செய்தது. வயலில் உங்களை வேலை செய்ய வைத்தது. தானியத்தைத் தங்கம் போல அள்ளிக் கொடுத்தது. இப்போது சொல்லுங் கள்! கோழி உங்களுக்குத் தந்தது பல தங்க முட்டைகளுக்குச் சமம்தானே!'' என்று கேட்டான்.

முருகனும் ''ஆம். நீ சொல்லுவது சரிதான். அது சரி, நீ எனக்கு உற வினனா?'' என்று கேட்டான். அவ னும் ''இல்லை: நான் பக்கத்து ஊர் பள்ளி ஆசிரியர். உங்களைப் பற்றி கேள்விப்பட்டேன். உங்களைத் திருத் தவே கோழியைப் பயன்படுத்தி னேன்,'' என்றான்.

முருகன் அவனுக்கு நன்றி செலுத்துவது போலப் புன்னகை புரிந்தவாறே நின்றான்.





# தேவதை மரம்

தேவலோகத்திலுள்ள கற்பக மரம் அதன் கீழ் யார் நின்று எந்தப் பொருளைக் கேட்டாலும் அதைக் கொடுக்கும் சக்தி பெற்றது. சுனந்தா என்ற தேவகன்னிகை தான் தேவேந்திரனின் மனைவியாகிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டாள்.

அதனால் அவள் கற்பக மரத்தடியே சென்று, ''கற்பக மரமே! நான் நினைக்கிறபடி நீ என்னை தேவேந்திரனின் மனைவியாக்கிவிடு!'' என்று வேண்டினாள்.

கற்பக மரமோ, ''என்னால் பொருள்களைத் தான் கொடுக்க முடியும். நீ கேட்டதோ உன் எண்ணப்படி நடக்க வேண்டும் என்னும் வரம். எனக்கு வரம் கொடுக்கும் சக்தி இல்லை. மேலும் நீ இப்படி விரும்புவது முறை அல்ல. தேவேந்திரனுக்கு ஏற்கனவே தர்மபத்தினி இருக்கிறாள். அவளுக்கு பதிலாக நீ அவன் மனைவியாக விரும்புவது பெரும் பாவம். எனவே இந்த எண்ணத்தை விட்டு விடு,'' என்றது.

அதைக் கேட்ட சுனந்தா, ''இதோ பார். உன்னால் என் விருப்பத்தை நிறைவேற்ற முடியாது என்றால் பேசாமல் இரு. எனக்கு ஒன்றும் நீ உபதேசம் செய்ய வேண்டாம்,'' என்று கோபத்தோடு கூறி அதன் கொம்புகளில் நான்கை முறித்துப் போட்டாள்.

இதனால் கோபம் கொண்டது கற்பக மரம். ''நீ ஆத்திரப்பட்டு இலைகளுள்ள என் கொம்புகளை முறித்து விட்டாய். அதனால் நீ பூலோகத்திற்குப் போய் ஒரு மரத்தில் நீண்டகாலம் இருக்கும்படி

- பாபநாசம் சாமா-

சபிக்கிறேன். உனக்கு இனி தேவ லோகத்தில் இடம் இல்லை. போ, பூலோகத்திற்கு!'' என்று சாபம் கொடுத்தது.

அதைக் கேட்ட சுனந்தா பயந்து போய், ''எனக்கு இப்படி ஒரு கொடிய தண்டனையா? என் விருப் பத்தைக் கூட உன்னிடம் தெரிவிப் பது ஒரு குற்றமா?'' என்று கேட்டாள்.

கற்பக மரமும், ''அது அல்ல நீ செய்த குற்றம். நீ என் கொம்பு களை இலைகளோடு ஒடித்துப் போட்டாய். ஒரு மரத்தின் கிளை களையும் கொம்புகளையும் இலை களையும் ஒடித்ததால் அதற்கு எவ் வளவு வலிக்கும் என்பது உன் போன்றவர்களுக்கு என்ன தெரியும்? நீ ஒரு மரத்திலிருந்து அது மொட்டை யாக்கப்படும்போது அது படும் பாட்டை நீ நேரில் காண வேண்டும் என்பதற்காகத்தான் உனக்கு இந்த சாபத்தை கொடுத்தேன். நீ சிறிது காலம் பூலோகத்தில் இருந்து விட்டு வா!'' என்றது.

சுனந்தாவும், ''சரி. நான் அங்கு செல்கிறேன். பூலோகத்தில் நான் இருக்கும்போது எனக்கு உள்ள சக்தி கள் எல்லாம் அப்படியே இருக்கும் அல்லவா?'' என்று கேட்டாள்.

கற்பக மரமும், ''ஆகா! இருக்கும். ஆனால் அவற்றைப் பிறருக்கு உத வவே பயன்படுத்த வேண்டும் என் பதை நன்கு நினைவில் வைத்துக் கொள்!'' என்று எச்சரித்தது.

சுனந்தாவும் அவ்விதமாக இருப்ப தாகக் கூறிவிட்டு தேவலோகத்தில்



இருந்து பூலோகத்திற்குச் சென்றாள். அங்கு ஒரு ஊரில் ஒரு வீட்டின் கொல் லைப் புறத்திலுள்ள மரத்திற்குப் போய் அதில் வசிக்கலானாள்.

அந்த வீட்டின் சொந்தக்காரன் கந்தப்பன். தேவலோகத்து சுனந்தா அந்த மரத்திற்கு வந்த அன்றே அவன் அந்த மரத்தின் ஒரு கிளையை ஒடித் தான். அப்போது சுனந்தா தன் கையையே ஒடிப்பதுபோல உணர்ந்து 'ஐயோ' என்று உரக்கக் கத்தினாள். அதைக் கேட்டு கந்தசாமி அரண்டு போனான்.

தான் ஒடித்த கிளையைக் கீழே போட்டுவிட்டு அவன் மரத்தின் மேல் யாராவது இருக்கிறார்களா என்று உற்றுப் பார்த்தான். யாரும் அவன் கண்களுக்கு தென்பட வில்லை. ஆனால் ஒரு குரல் மட்டும் ''நான் உனக்கு என்ன கெடுதல்



செய்தேன்? என் கிளையை ஏன் ஒடித்தாய்?'' என்று கேட்டது அவன் காதில் விழுந்தது. அது சுனந்தா கூறியதுதான்.

ஒரு மரம் பேசியது கேட்டு கந்தப்பன் ஆச்சரியப்பட்டான். அது கேட்ட கேள்விக்கு ''வீட்டில் சமைக்க அடுப்பில் வைக்க விறகு இல்லை. கடைக்குப் போய் விறகு வாங்கக் கையில் பணம் இல்லை. அதனால் தான் மரக்கிளையை ஒடித்தேன்,'' என்று அவன் மிகவும் பயந்தவாறே கூறினான்.

அப்போது சுனந்தா, ''நான் தேவ லோக தேவதை. இந்த மரம் நீண்ட காலமாக மக்களுக்குப் பயன்பட்டு வருகிறது. அதற்காககத்தான் இதற்கு உதவும்படி பகவான் என்னை இங்கே அனுப்பி இருக்கிறார். நான் இன்று முதல் இந்த மரத்தில்தான் வசிக்கப் போகிறேன். இனிமேல் நீ இந்த மரத்திற்கு எவ்விதத் தீங்கும் இழைக்கக் கூடாது. உனக்கு என்ன வேண்டுமானாலும் என்னைக் கேள். நான் கொடுக்கிறேன்,'' என்று கூறி ஒரு அடுப்பை வரவழைத்து அவனுக்கு கொடுத்தாள்.

வீட்டிற்கு அதை எடுத்துப் போன அவன் அதைப் பற்ற வைக்க நினைத்தான். உடனே அது தானே எரிந்தது. இனி எரிய வேண்டாம் என எண்ணியதும் அது அணைந்தது. அதன் சக்தியைக் கண்டு மகிழ்ந்து மூன்று நாட்கள் அதை அவன் பயன்படுத்தினான். நான்காவது நாள் அந்த மரத்திற்குக் கோடாலியுடன் சென்றான்.

அதைக் கண்ட சுனந்தா ''ஏன் இப்போது கோடாலியோடு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டது. அவனும், ''என் தாயார் உடல் நலம் குன்றி

இருக்கிறாள். வைத்தியம் பார்க்கப் பணம் இல்லை. அதனால் மரத்தை வெட்டி விறகாக்கி விற்றுப் பணம் சம்பாதிக்க நினைத்தேன்,'' என்றான்.

அப்போது சுனந்தா, ''மரத்தை வெட்டாதே! உன் தாயாரை இங்கு அழைத்து வந்து மரத்தின் கீழ் படுக்க வை. இந்த மரத்தின் காற்று இன்று முழுவதும் பட்டால் போதும். அவள் குணமடைந்துவிடுவாள்,'' என்றாள்.

கந்தப்பனும் அவ்வாறே செய்ய அன்று மாலையே அவள் குணம் அடைந்து விட்டாள். இதனால் அந்த வீட்டிலுள்ளவர்கள் அந்த மரத்தை தெய்வமாகக் கருதி தினமும் அதற்கு பூஜை செய்யலானார்கள். அந்த மரம் சக்தி வாய்ந்தது எனத் தெரிந்து அந்த ஊர்க்காரர்கள் எல்லோரும் அத னருகே வந்து தமக்கு வேண்டியதைக் கூறிப் பெற்றுச் சென்றார்கள்.

இவ்வாறு சுனந்தா அந்த மரத்தில் வசித்து யார் எதைக் கேட்டாலும் அதை அவருக்குக் கொடுத்து வந் தாள். அதனால் சிலர் தமக்குப் பயன் படாமலும் பிறரைத் துன்புறுத்தவும் கோரிக்கைகளை அம்மரத்திடம் கேட் டார்கள். சுனந்தா அவற்றை நிறை வேற்றவில்லை. அதனால் அவர்கள் அந்த மரத்திலுள்ள தேவதையின் சக்தி குறைந்து போய்விட்டது என்று பிரசாரம் செய்யலானார்கள்.

அது கண்டு மனம் புழுங்கி தேவ லோகம் போய் கற்பக மரத்திடம், ''என்னால் மக்களின் நச்சரிப்பு சகிக்க முடியவில்லை. நான் உதவினால் உதவி பெற்றவர்கள் என்னைப் புகழ் கிறார்கள். ஆனால் சிலர் பிறருக்குக் கெடுதல் செய்ய வரங்கள் கேட்கவே, நான் மறுத்தேன். அதனால் கோபம் கொண்டு என்னை ஒரேயடியாகத் தூற்றுகிறார்கள். என்ன செய்வது?'' என்று கேட்டாள்.

கற்பக மரமும், ''இப்போது உனக்கு ஒரு மரத்தின் கஷ்டங்கள் என்ன என்பது புரிந்துவிட்டது. உன் பரோபகார சக்தியை உலகின் மற்ற மரங்களுக்கு எல்லாம் பகிர்ந்து கொடு!'' என்று கூறவே, அவளும் அவ்வாறே செய்தாள்.

அன்று முதல் உலகில் எல்லா மரங்களும் மக்களுக்கு ஏதோ ஒரு விதத்தில் பயன்பட்டு வரலாயின.



# அருணாசலப் பிரதேச கிராமியக் கதை

நம் நாட்டின் வடகிழக்கிலுள்ள மாநிலங்களில் அருணாசல்பிரதேஷ் என்பதுதான் பெரிது. உதயமாகும் சூரியனின் நிலம் என் இதைக் கூறு கிறார்கள். வடக்கே பனி படர்ந்த மலையிலிருந்து தெற்கே சமவெளி யில் பிரம்மபுத்திரா நதிப் பள்ளத் தாக்கு வரை இது பரவியுள்ளது.

அருணாசல் பிரதேஷ் 1987 பிப்ரவரி 20ல் மாநில அந்தஸ்தைப் பெற்றது. இந்த மாநிலத்திற்கு நீண்ட சர்வதேச எல்லை உள்ளது. மேற்கே பூடானையும், வடக்கிலும் வட கிழக்கிலும் சீனாவையும் கிழக்கே மியான்மர் (பர்மா) நாட்டையும் எல்லையாகக் கொண்டுள்ளது. இது போக அஸ்ஸாமும் நாகலாந்தும் இதன் எல்லைகளாக உள்ளன.

இம்மாநிலத்தின் பரப்பளவு 83,743 ச.கி.மீ. மக்கள் தொகை, 1,091,117. இம் மாநிலம் முக்கிய ஐந்து நதிப் பள்ளத்தாக்குப் பகுதி களாகப் பிரிக்கபட்டுள்ளது.. இங்கு உயர்ந்த மலைகளும் அடர்ந்த காடு களும் உள்ளன. இங்கு 20 முக்கிய மலைச் சாதிகளும் பல உட்பிரிவு மலைச் சாதியினரும் உள்ளனர். இவற்றிற்குத் தனி அடையாளங் களும் பேச பல வட்டாரமொழிகளும் உள்ளன. இதன் தலை நகர் ஈடா நகர்.

# தப்பிய விதம்

நிஷாங் என்ற கிராமத்தில் சிறுவர் களான நிம்மாவும், நியாவும் இருந் தார்கள். அவர்கள் அண்ணன் தம்பி கள். அண்ணன் நிம்மா கெட்டிக் காரன். நியாவோ அவசரக்குடுக்கை. ஒருநாள் அவர்களது பெற்றோர்கள் வேட்டையாடப் போயிருந்தார்கள். அந்த சமயம் பார்த்து அப்பா பில்லி என்ற பூதம் ஒரு பெரிய கூண்டை எடுத்துக் கொண்டு பன்றிகளைத் திருடுவதற்காக வந்தது.



அப்போது அந்த பூதம் வீட்டில் சிறுவர்கள் இருவரும் தனியாக விளையாடிக் , கொண்டிருப்பதை பார்த்துவிட்டது.

பூதமும், ''ஆகா! நல்ல வேட்டை தான். இவர்களை யாருக்கும் தெரியாமல் பிடித்துப்போய் வேகவைத்து விழுங்குகிறேன்,'' என்று எண்ணியது. அச்சிறுவர்களின் மனதைக் கவர அருகில் தென்பட்ட ஒரு வாழை மரத்தின் வாழைப்பழக் குலை ஒன்றை எடுத்து வந்தது. அவற்றை அச்சிறுவர்களிடம் கொடுத்து, ''குழந்தைகளே! நான் யார் தெரியுமா? உங்கள் மாமா'' என்று சிரித்துக் கொண்டே கூறியது.

நிம்மா அந்த வார்த்தைகளில் மயங்காமல் ''எங்கள் மாமாவா? இவ்வளவு விகாரமான தடிமாமா எங்களுக்கு இல்லையே!'' என்றான். ஆனால் நியாவோ பூதம் கொடுத்த வாழைப்பழத்தை வாங்கிக் கொண்டு விட்டான். நிம்மாவும் ஒரு பழத்தை எடுத்து உரித்துத் தின்னும்போது பூதம் அச்சிறுவர்களைப் பிடித்துத் தன் கூண்டுக்குள் போட்டுக் கொண்டு மலையிலுள்ள தன் குகைக்கு எடுத்துச் சென்றது.

அங்கு அது தன் மனைவியிடம், ''அடுப்பை மூட்டிப் பெரிய வாணலியை வை. இன்றைய சமையலுக்கு நல்ல பொருள் கிடைத்திருக்கிறது,'' என்றது.

பெண் பூதமும் இரு சிறுவர்களைத் தன் கணவன் பிடித்துக் கொண்டு வந்திருப்பது கண்டு



மகிழ்ந்து உடனே அடுப்பை மூட்டிப் பெரிய வாணலியை அதன் மீது வைத்துத் தண்ணீரை விட்டது.

ஆண் பூதம் அந்த இரு சிறுவர்களையும் வாணலி நீரில் போட்டது. நிம்மாவுக்கும் நியாவுக்கும் நீந்தத் தெரியுமாதலால் அதில் நீந்தி மிதந்தவாறு இருந்தார்கள். அப்போது ஆண் பூதம் தன் மனைவியிடம், ''நீர் கொதித்து கொப்புளங்கள் வருகின்றனவா என்று பார்!'' எனக் கூறியது.

இதைக் கேட்ட சிறுவர்களும் நீரினுள் அமிழ்ந்து கொப்புளங்கள் மேலே வர மூச்சு விட்டார்கள். அதைக் கண்ட பெண் பூதம், ''தண்ணீர் கொதிக்கிறது. இன்னும் கொஞ்ச நேரத்தில் அவர்கள் நன்கு வெந்துவிடுவார்கள்,'' என்றது.

உடனே ஆண் பூதம், ''அப்படியானால் வா. இருவரும் கைகளைக் கழுவிக் கொண்டு வந்து சாப்பிட உட்காரலாம்,'' என்றது. பெண் பூதம் தன் கணவனுடன் கை கழுவச் சென்றது.

இரு பூதங்களும் சென்ற உடனே சிறுவர்கள் இருவரும் வாணலியில் இருந்து வெளியே குதித்து, அங்கு இருந்த இரு குட்டி பூதங்களைத் தூக்கி வாணலிக்குள் போட்டார்கள். அவை பெரிய பூதங்களின் குழந்தைகள். அவை பலமாக அலறின. சிறுவர்கள் இருவரும் சற்றும் தாமதியாமல் அங்கிருந்து காட்டிற்குள் ஓடிவிட்டார்கள்.

கைகளை அலம்பிக் கொண்டு வந்த இரு பூதங்களும் வாணலியில் இருந்து அலறும் குரல்களைக் கேட்டு அதனருகே போய்ப் பார்த்தன.



வெந்து கொண்டிருப்பது தம் குழந்தைகளே எனக் கண்டு அவை திகைத்தன.

பெண் பூதம் சட்டெனத் தன் குழந்தைகளை வாணலியிலிருந்து வெளியே தூக்கிப் போட்டது. ஆண் பூதமோ, ''இது அந்த இரு போக்கிரிப் பயல் களின் வேலை. வா என்னோடு அவர்களைப் பிடித்துக் கொண்டு வரலாம்!'' என்றது.

இரு பூதங்களும் அச்சிறுவர்களைத் தேடிப் பிடிக்கத் தம் குகையிலிருந்து கிளம்பின. சற்று நேரத்தில் அவை அவர்களை அங்குள்ள ஆற்றின் கரையில் பார்த்துவிட்டன. சிறுவர்களும் இரு பெரிய பூதங்கள் தம்மை பிடிக்க வருவதைக் கண்டு விட்டார்கள். உடனே அவர்கள் அருகேயுள்ள உயரமான மரத்தின் மீது ஏறி உயரமான கிளைகளில் உட்கார்ந்து விட்டார்கள்.

இரு பூதங்களும் அந்த மரத்தடியே வந்து நின்றன. பெண் பூதம் ஆண் பூதத்திடம் அம்மரத்தின் மீது ஏறி சிறுவர்களைப் பிடிக்கும்படிக் கூறியது.

ஆண் பூதமோ தனக்கு மரம் ஏறத் தெரியாது என்று கூறி அச்சிறுவர்களிடம், ''எப்படி நீங்கள் மரத்தின் மீது ஏறினீர்கள்? யார் இதைக் கற்றுக் கொடுத்தார்கள்?'' என்று கேட்டது.

நியாவும் ''எங்கள் தாத்தாதான் கொடிகளைப் பற்றிக் கொண்டு ஏறக் கற்றுக் கொடுத்தார்கள்.'' என்று உளறி விட்டான். அவர்கள் அந்த மரத்தின் மீது ஏறியது மரத்தை உறுதி

# கலையும் கைவினைகளும்



கைவினைப் பொருள்களுக்கும் கண்கவர் நெசவாடைகளுக்கும் அருணாசல் பிரதேஷ் புகழ் பெற்றது. மூங்கிலாலும் பிரம்பாலும் பல அழகிய பொருள்களை இம்மாநிலத்தவர்கள் தயாரிக்கிறார்கள். நாற்காலிகள், மேஜைகள், தொப்பிகள், தட்டுகள் மற்றும் கூடைகள் இவர்கள் தயாரிப்பவை. தலையில் அணியும் தொப்பிகளும், குல்லாய்களும் வேலைப்பாடு மிக்கவை.

பாசிமணிகளைக் கொண்டு பலவித ஆபரணங்களும் இங்கு தயாரிக்கப் படுகின்றன. கழுத்தில் அணியவும் கைகளில் கட்டிக் கொள்ளவும் இடுப்பில் அணியவும் விதவித வடிவங்கள் கொண்ட ஆபரணங்கள் கலைத்திறனுடன் பாசிமணிகள் கொண்டு இங்கு செய்யப்படுகிறது. ஆண்களும் பெண்களும் இவற்றை அணிகிறார்கள். ஒரு வகைப்புல்லால் செய்யப்படும் கழுத்துச் சங்கிலிகளைப் பெண்கள் விரும்பி அணிகிறார்கள். இவ்வகைப் புல் ஆறு, கால்வாய், ஏரி ஆகியவற்றின் கரைகளில் ஒரு வருடத்தில் செப்டம்பரிலிருந்து பிப்ரவரி வரை வளர்கின்றன.

கையால் நெய்யப்படும் ஆடைகள் மிக அழகானவை. விரிப்புகள், பைகள் போன்றவை தயாரிப்பதும் சிறு கைத்தொழில்களாம்.

யாகப்பற்றி இருந்த ஒரு கொடியைப் பிடித்துக் கொண்டு தான்.

பூதமும் அந்தக் கொடியைப் பார்த்துவிட்டது. அது தன் மனைவியிடம், ''நான் இந்தக் கொடியைப் பற்றித் தொற்றிக் கொண்டுபோய் அவர்களைப் பிடித்துப் போடுகிறேன். நீ அவர்களைப் பிடித்து தலைகளை ஒடித்துவிடு. அப்போது அவர்கள் தப்ப முடியாது,'' என்றது.

பெண் பூதமும் ஒரு கோடாலியுடன் தயாராக நின்றது. கொடியைப் பற்றிக் கொண்டு பூதம் வருவதைக் கண்டு நிம்மா தன் இடுப்பிலிருந்த சிறுகத்தியை எடுத்துக் கொடியை அறுக்கலானான்.

கொடி அறுந்தது. பூதம் தடாலென்று விழுந்து பயங்கரமாக அலறியது. பெண் பூதமோ விழுந்தது ஒரு சிறுவன் என எண்ணிக் கோடாலியால் அதன் தலையைத் தாக்கி விட்டது. பூதங்கள் எளிதில் இறந்து போகாதவை. அதனால் ஆண் பூதம் அந்தக் காடே அதிரும்படிக் கத்திக் கொண்டே இருந்தது.

பெண் பூதத்திற்குத் தான் தவறு செய்துவிட்டது தெரிந்தது. அதுவும் காடே அதிரும்படி அழுதவாறே, 'ஐயோ! கண்மூடித்தனமாக என் கணவனையே தாக்கிவிட்டேனே! பரவாயில்லை, இன்னும் சற்று நேரத்தில் என் கணவனுக்குத் தன்



நினைவு வந்துவிடும். அப்போது ஏதாவது செய்கிறேன்,' என்று மனதினுள் கூறிக் கொண்டது.

ஆண் பூதம் தன் நினைவை இழந்து கிடந்தது. உணர்வு பெற்றதும் அது தன் மனைவியைத் திட்டி, பலமாக அடித்து நொறுக்கியது. அதன் காயத்தில் இருந்து ரத்தம் கொட்டியது. அதையும் பொருட் படுத்தாமல் அந்த ஆண் பூதம் தன் மனைவியின் கையிலிருந்த கோடாலியை வாங்கி அந்த மரத்தை வெட்டத் தொடங்கியது.

அதைக் கண்ட நியா பயந்து போய், ''நிம்மா! எனக்குப் பயமாக இருக்கிறது. பூதம் நம்மைப் பிடித் துக் கொண்டுபோய் மறுபடியும் வாணலியில் கொதிக்கும் நீரில் போட்டு வேக வைத்து சாப்பிடத் தான் போகிறது,'' என்று கூறிக் கண் ணீர் வடித்தான்.

அது சிறுவர்களைப் பார்த்து, ''அடே பயல்களா! உங்களை விட மாட்டேன். என்னை ஏமாற்றவா பார்த்தீர்கள்? நாங்கள் கை கழுவப் போயிருந்தபோது வாணலியில் இருந்து குதித்து எங்கள் குட்டி களையா அதற்குள் போட்டுவிட்டுத் தப்பினீர்கள்? இனி எப்படித் தப்பி

## நடனங்கள்

இங்கு மலைவாசிகள் வாழ்வில் நடனங்கள் முக்கியத்துவம் பெற் றுள்ளன. இம்மாநில மலைவாசி கள் பண்டிகைகளிலும் விசேஷ வைபவங்களிலும் சிறப்பு நடனங் களை ஆடுகிறார்கள். பொழுது போக்காகவும் இவர்கள் நடனங்கள் ஆடுவதும் உண்டு. மலைச்சாதி யின் ஒவ்வொரு உட்பிரிவினரும் தமக் கென உள்ள நடனங்களை ஆடு கிறார்கள். இவர்களது நடனங்களின் கருத்துக்கள் பெரும்பாலும் புத்த மதத்தைத் தழுவியனவாகவே இருக்கும்.

இந்த நடனங்களில் ஆண்களும் பெண்களும் பங்கு பெறுகிறார்கள். சில மத சம்பிரதாய நடனங்களில் பெண்கள் நடனமாட அனுமதிக்கப் படுவதில்லை. சிம்மம், காட்டாடு, மயில் ஆகியவை போன்ற நடனங் கள் மிகவும் பிரபலமானவை. இந்த நடனங்கள் பெரும்பாலும் கூட்டப் பாடல்களுடன் நடைபெறுகின்றன.

ஓடுவீர்கள் என்பதை நானும் பார்க்கிறேன்,'' என்று உறுமியது.

நியா அழுதவாறே, ''நிம்மா! நாம் இனி தப்ப முடியாது. இதனிடம் அகப்பட்டுக் கொள்ளத்தான் போகிறோம்'' என்றான்.

நிம்மாவோ, ''கவலைப்படாதே. கடவுள் இருக்கிறார். அவர் நம்மைக் காப்பாற்றுவார். அவரை நீயும் வேண்டிக் கொள்'' என்றான். பூதம் மரத்தை வெட்டியது. அது சாய்ந்து ஆற்றினுள் விழுந்தது. ஆற்றில் நீரோட்டம் வெகுவேகமாக இருந்தது. அதனால் அதில் விழுந்த சிறுவர்கள் வெகுதூரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டார்கள்.

அப்போது நிம்மா நியாவிடம், ''பார்த்தாயா! நாம் கடவுளை வேண்டிக் கொண்டோம். அதன் பலன்



கைமேல் கிடைத்துவிட்டது. அவரை நம்பினவர்களை அவர் ஒருநாளும் கைவிட மாட்டார். நாம் தப்பிவிட்டோம். அந்த பூதங்களால் ஆற்றில் குதித்து வந்து நம்மைப் பிடிக்க முடியாது. இனி நாம் நம் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்துவிடுவோம்,'' என்றான்.

ஆற்றின் கரையில் இருந்த இரு பூதங்களாலும் எதுவும் செய்ய முடியவில்லை. சிறுவர்களோ நீந்திக் கரையில் ஏறித் தம் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

# இயற்கைச் செல்வம்

அருணாசல் பிரதேஷ் இயற்கையின் பொக்கிஷம் எனப்படுகிறது. இங்கு பலவித மரம் செடிகொடிகளைக் காணலாம்.

இங்குள்ள காடுகளில் பலவித மரங்கள் அடர்ந்து வளர்ந்துள்ளதைக் காணலாம். 5000 வகை செடி, கொடி மரங்களும் 85 வித உயிரினங்களும் 500 விதப் பறவைகளும், ஏராளமான வண்ணத்துப் பூச்சிகளும், ஊர்வனவும், பாம்பு வகைகளும், புழுபூச்சிகளும் காணக் கிடைக்கின்றன.

இந்த மாநிலம் மலைப்பாங்கானது. அடிவாரத்தில் 50மீ உயரத்திலிருந்து போகப்போக உயர்ந்து கொண்டே 7000 மீ.வரை உயரத்தை எட்டுகிறது. இந்த மலைகளிடையில் பல ஆறுகளும் சிற்றோடைகளும் உள்ளன.

# நம் இந்தியா

*நீங்கள் நம் நாட்டுப் புராணக் கதைகள் பலவற்றைப் படித்திருப்பீர்கள். அவற்றில் பல நிகழ்ச்சிகளை நினைவில் கொண்டிருந்தாலும் அக்கதைகளில் வரும் பெயர்களும் இடங்களும் சரியாக நினைவில் இராமல் போகலாம். அவை உங்களுக்கு தெரிந்துள்ளனவா என்பதைக் காணவே இம்மாதவினாக்கள் கேட்கப் படுகின்றன. விடைகளை எழுதி வைத்துக் கொண்டு சரிபாருங்கள்.*

1. இந்தியப் புராண் ஏழு 'சிரஞ்சீவிகள்' எனப்படுவோர் யாவர்?
2. தேவர்களின் பொக்கிஷதாரர் யார்?
3. சூரியதேவனின் மனைவியின் பெயர் என்ன?
4. விநாயகரும் முருகனும் தம் தாயாரிடமிருந்து ஒரு பொருளை அடைய விரும்பினார்கள். தாயார் அவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்தாள். அவர்களது தாயார் வைத்திருந்த பொருள் என்ன?
5. மகாபாரதத்தில் வரும் சத்தியவதி ஒரு மீனவப் பெண். இந்தப் பெயருடன் ஒரு தந்தையும் மகனும் தொடர்புடையவர்கள். அவர்கள் யார்?
6. சிறுவன் பரதன் சிங்கக் குட்டிகளுடன் விளையாடுபவன். அவனுக்கு வேறொரு பெயரும் உண்டு. அது என்ன?
7. அர்ஜுனன் பீஷ்மரைத் தன் அம்பால் வீழ்த்தியபோது அவர் எதிர்க்க முடியாத ஒருவனின் பின்னால் மறைந்து கொண்டு அம்பை எய்தான். யார் அவன்?
8. காகுஸ்தர், திரிசங்கு, அம்பரீஷன் ஆகிய மூவருக்கும் உள்ள பொது அம்சம் என்ன?
9. பிரீதா என்பது தெரிந்த ஒன்று. அது என்ன? *(விடைகள் அடுத்த மாதம்)*

## பிப்ரவரி 2003 வினாக்களின் விடைகள்

1. 1951–புதுடில்லி.
2. அப்பு என்னும் யானை.
3. சந்த்ராம். அவர் எடுத்த நேரம் 1 மணி 29 நிமிடம் 29 விநாடிகள்.
4. எட்டு தடவைகள். 1928, 1932, 1936, 1948, 1952, 1956, 1964, 1980.
5. பி.டி.உஷா.
6. கமல்ஜித் சந்து.
7. அ) பெண்கள் கிரிக்கெட், ஆ) பள்ளி யின் கால்பந்து, இ) கோல்ஃப்
8. அ) மில்காசிங், ஆ) சுனீல்காவஸ்கர், இ) தியான சந்த்
9. மிஹிர்சென், 1958ல் அட்லாண்டிக் சமுத்திரத்தையும் பசிபிக் மாக்கடலையும் இணைக்கும் பனாமா கால்வாயை நீந்திக் கடந்த அமெரிக்கரல்லாத முதல் நீச்சல் வீரர்.
10. பிரகாஷ் பட்கோனே – 16 வயது.
11. சிம்லாவினருகேயுள்ள சைல்.



# விநாயகர்

பாண்டவர்கள் நாரதர் கூறியபடி கணேச விரதத்தைத் தம் புரோகித ரான தௌம்யரைக் கொண்டு நடத்தித் தம் அஞ்ஞாத வாசத்தை விராட மன்னனின் நாட்டில் வெற்றிகரமாக முடித்தார்கள். பின்னர் ஸ்ரீ கிருஷ்ண ரின் பக்கபலம் கொண்டு அவர்கள் கௌரவர்களோடு போர் புரிந்து வெற்றி பெற்றுத் தம் நாட்டை திரும்பப் பெற்றார்கள். தருமரின் பட்டாபிஷேகம் விமரிசையாக நடைபெற்றது.

பிறகு தருமர் அசுவமேதயாகம் செய்ய ஏற்பாடுகளைச் செய்ய லானார். அர்ஜுனன் யாகக் குதிரை யின் பின்னால் பெருத்த படையோடு பல நாடுகளுக்குச் சென்றான். தௌம்யரும் அவனோடு சென்றார். யாகக் குதிரை சென்ற நாடுகளில் இருந்த மன்னர்கள் எல்லாம் தருமரின் கீழ் சிற்றரசர்களாக இருக்கச் சம்மதித்தார்கள். யாகக் குதிரை இப்படியே போய் ஓரிடத்தில் நின்று விட்டது. அங்கிருந்து அது நகரவே இல்லை.

அதுகண்டு அர்ஜுனன் ஆச்சரியப் பட்டு தௌம்யரிடம் அதற்கு என்ன காரணம் என்று கேட்டான். அவரும் அருகிலிருந்த நகருக்கு அழைத்துப் போய் ஒரு விநாயகரின் சிலையைக் காட்டினார். அது ஒரு பாறையில் இருந்து உருவாகி இருந்தது. பார்க்க மிகவும் அழகாக இருந்தது.

தௌம்யர் அர்ஜுனனிடம், ''அர்ஜுனா! இந்த விநாயகரை வணங்கிப் பூஜை செய். இவருக்கு வாதாபி



கணபதி என்ற பெயர். இவரைப் பற்றியும் இந்த வாதாபி நகரம் பற்றியும் விவரமாகக் கூறுகிறேன்,'' எனவே அர்ஜுனனும் பூஜையை முடித்துவிட்டு அந்த நகரைச் சுற்றிப் பார்த்தான்.

ஒரு காலத்தில் அந்நகர் அழகாக இருந்திருக்க வேண்டும். ஆனால் இப்போதோ பாழடைந்து கிடந்தது. ஏதோ பெயரளவில் ஒரு சிலர் சில வீடுகளில் வசித்தனர். அவர்கள் அர்ஜுனனைக் கண்டு மகிழ்ந்து வர வேற்றுப் பழங்களை அளித்து தம் நகரை மீண்டும் நிர்மாணித்துத் தரு மாறு வேண்டினார்கள்.

தௌம்யரும் ''அர்ஜுனா! இது வாதாபி நகரம். அகஸ்தியர் இந்த விநாயகர் சிலையை உருவாக்கி இங்கு வைத்தார். கங்காதேவி கவேரர் என்ற ராஜரிஷியின் கமண்டலத்தில் விழுந்து காவேரியாகி அவரது ஆசிரமத்தில் வளர்ந்து வந்தாள். அகஸ்தியர் அந்தப் பெண்ணைப் பார்த்ததும் தாம் அவளை விவாகம் செய்து கொள்வதாக கவேரரிடம் கூறினார்.'

கவேரரும் ''எனக்கு சம்மதமே. ஆனால் காவேரியின் அபிப்பிராயத் தையும் தெரிந்து கொள்வது நல்லது,'' என்றார். அகஸ்தியரும் 'சரி' எனக் கூறிக் காவேரியிடம் சுமுகமாகப் பேசிப் பழகலானார். ஒருநாள் அவள் அகஸ்தியரிடம் ''நாம் சஹ்ய மலை மீதுள்ள காடுகளைப் பார்த்து வருவோம்,'' எனவே அவரும் அவளை அழைத்துக் கொண்டு அங்கு சென்றார்.

அப்பகுதியில் சுற்றி வரும்போது ஒரு நீர் மடுவில் அழகான தாமரை மலர் இருப்பதைக் காவேரி கண்டு அதனைப் பறிக்க அதனுள் இறங்கினாள். ஆனால் அந்த மடுவின் நீர் அவள் மீது பட்டதுமே அவள் தண்ணீராக மாறிப் பெருக்கு எடுத்து சஹ்யமலை உச்சியிலிருந்து கீழ் நோக்கிப் பாய்ந்து செல்லலானாள். அவள் காவேரி நதியாக மாறி விட்டாள்.

அகஸ்தியர் காவேரியையே வெகு நாட்கள் வரை நினைத்துக் கொண்டே இருந்தார். பின்னர் விரக்தி அடைந்து அவர் கடுந்தவம் புரிந்து மனதை அடக்கி மாபெரும் முனிவர் என்ற பெயரும் பெற்றார். ஒருநாள் அவர் ஒரு மரக்கிளையில் தொங்கும் பித்ரு தேவதைகளைக் கண்டு, ''நீங்கள் யார்? ஏன் இப்படித் தொங்கிக்

கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார். அவர்களும் ''எங்கள் வம்சத்தில் தோன்றிய அகஸ்தியன் குடும்பஸ்தனாக ஆகிவிட்டால் எங்களுக்கு விமோசனம் ஏற்பட்டு இந்த நிலை மாறிவிடும். அவன் அப்படிச் செய்யும்வரை நாங்கள் இப்படித்தான் இருந்தாக வேண்டும்,'' என்றார்கள்.

அப்போது அகஸ்தியர் ஞான திருஷ்டியால் பார்த்தார். தாம் விரும்பிய காவேரி மறுபிறப்பில் விதர்ப்ப மன்னனின் புதல்வி லோபாமுத்திரையாகப் பிறந்திருப்பது தெரிந்தது. அவர் விதர்ப்ப மன்னனிடம் போய் லோபாமுத்திரையைத் தனக்கு மணம் செய்து வைக்கும்படிக் கேட்டார்.

காய் கனி கிழங்குகளைச் சாப்பிட்டு காஷாயம் அணிந்து கானகத்தில் திரியும் ஒருவனுக்கு அரச குமாரியை யாராவது கொடுக்க இசைவார்களா? ஆனால் அப்படிக் கொடுக்காவிட்டால் முனிவர் தன்னை சபித்து விடுவாரோ என்ற பயம் விதர்ப்ப மன்னனுக்கு ஏற்பட்டது. அதனால் அவன் ஒரே கவலையில் மூழ்கி விட்டான். அதைக் கண்ட லோபாமுத்திரை விஷயத்தைத் தெரிந்து கொண்டு தன் தந்தையிடம் தன்னை அகஸ்தியருக்கே மணம் செய்து வைக்கும்படிக் கூறினாள். விதர்ப்ப மன்னனும் லோபாமுத்திரையை அகஸ்தியருக்கு திருமணம் செய்து வைத்து அனுப்பி வைத்தான்.

அகஸ்தியர் லோபாமுத்திரையுடன் தம் ஆசிரமத்திற்கு வந்தார்.



அவர் அவளிடம் ''என் பித்ருக்கள் நரக வேதனையிலிருந்து விடுபட நமக்குக் குழந்தைகள் பிறக்க வேண்டும். அதற்காகவே நான் உன்னைத் திருமணம் செய்து கொண்டேன்,'' என்றார்.

அப்போது லோபாமுத்திரை தன் அழுக்கடைந்து நைந்து போன புடவையைக் காட்டி, ''நான் அரச குமாரியாகப் பிறந்தவள். எனக்கு இந்த மாதிரிப் புடவை இல்லாமல் நல்ல பட்டுப் புடவைகளாயும் நகைகளாகவும் கொண்டு வந்து கொடுக்க வேண்டியது உங்கள் கடமை. அதற்கு வேண்டிய பணம் சம்பாதித்துக் கொண்டு வாருங்கள்!'' என்று கூறினாள். அகஸ்தியர் அவள் கூறுவதில் உண்மை உள்ளது என நினைத்து பணம் சம்பாதித்து வரக் கிளம்பினார். அவர் பல அரசர்களைக் கண்டு அவர்களிடம் உபரியாக உள்ள பணத்தை

தமக்குக் கொடுக்கும்படிக் கேட்டார். ஆனால் எல்லா அரசர்களும் தம் மிடம் உபரியாகப் பணம் இல்லை என்று கூறி அனுப்பிவிட்டார்கள்.

அகஸ்தியர் மனம் ஒடிந்து போய் போய்க் கொண்டிருக்கையில் ஓரிடத் தில் ஒரு பாறையைக் கண்டார். அந்தப் பாறை விநாயகர் வடிவில் உள்ளது கண்டு அவர் அதனை வணங்கி ''விநாயகரே! தவத்தை தவிர, வேறு எதையும் பற்றி நினை யாத நான் பணம் சம்பாதிக்கக் கிளம் பினேன். ஆனால் அதை அடைய வழி தெரியவில்லை. எனக்குப் பணம் எப்படிக் கிடைக்கும் என்று வழி காட்டுங்கள்,'' என வேண்டினார்.

அப்போது விநாயகரே அவர் முன் தோன்றி ''என்ன மகரிஷியே! பாறை யுடன் என்ன பேசிக் கொண்டிருக் கிறீர்கள்?'' என்று கேட்டார்.

அகஸ்தியரும் தம் பிரச்சினை யைக் கூறவே விநாயகரும், ''பேஷ்! நீங்கள் சரியான இடத்திற்கே வந் திருக்கிறீர்கள். சற்று நேரத்தில் இல் வலன் என்பவன் வந்து உங்களைத் தன் வீட்டில் சாப்பிடக் கூப்பிடுவான். நீங்கள் போய் அவனிடம் இருக்கும் கணக்கில் அடங்காத பணத்தை அடையுங்கள். அங்கு உங்களால் ஒரு முக்கியமான வேலையும் ஆக வேண் டியது இருக்கிறது,'' என்றார்.

அப்போது அகஸ்தியர் ''விநாய கரே! இந்தப் பாறை உங்களது விக் கிரகம் போல இருந்தது. எனவே இது தானே முளைத்து வந்தது போலத் தோன்றச் செய்ய வேண்டுகிறேன்,''



என்றார். விநாயகரும் அப்படியே ஆகட்டும் என கூறி மறைந்தார்.

அகஸ்தியர் மிகவும் களைத்துப் போயிருந்தார். ரொம்பப் பசியாகவும் அவருக்கு இருந்தது. அந்தப் பாறையருகிலேயே அவர் உட்கார்ந்தும் விட்டார். அப்போது இல்வலன் சிலரை அழைத்துக் கொண்டு வருவதை அவர் கண்டார். அகஸ்தியருக்கு அவனை பற்றிய விவரம் உடனே தெரிந்து போயிற்று.

அப்பகுதியில் வாதாபி, இல்வலன் என்ற இரு ராட்சஸர்கள் இருந்தார்கள். அவர்கள் மாயாவிகள். அவ்வழியே வரும் முனிவர்களையும், பயணிகளையும் கொன்று சாப்பிட்டுவிட்டு அவர்கள் வைத்திருந்த பணத்தைச் சேர்த்து வைத்து வந்தார்கள். இல்வலன் தான தர்மம் செய்யும் மன்னன் போல வேஷம் போட்டுக் கொண்டு அவ்வழியே வருபவர்களைத் தன் வீட்டிற்குச் சாப்பிட வருமாறு கூறி அழைத்துச் செல்வான்.

அவன் அப்போது வாதாபியை கொழுத்த ஆடாக மாற்றி அதனை வெட்டி சமைத்து அந்த மாமிசம் கொடுத்து அவர்களுக்கு விருந்தளிப்பான். அவர்கள் விருந்தைச் சாப்பிட்டுவிட்டு படுத்துச் சிரம பரிகாரம் செய்து கொள்ளும் போது இல்வலன், ''வாதாபி, வா வெளியே!'' என்பான். மறுநிமிடமே வாதாபி விருந்து சாப்பிட்டவர்களின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வருவான். பிறகு அந்த நர மாமிசத்தை இல்வலனும்



வாதாபியும் சாப்பிட்டுவிடுவார்கள். இந்த ரகசியத்தை அகஸ்தியர் அறிந்து கொண்டார்.

இல்வலன் அகஸ்தியரை அணுகி அவரைத் தன் வீட்டிற்கு வந்து சாப்பிட்டுப் போகுமாறு வேண்டினான். அகஸ்தியரும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தவர் போல அவனோடு அவனது இருப்பிடத்திற்குச் சென்றார்.

அவர் இல்வலனிடம் ''எனக்கு ரொம்பப் பசி. நான் ஆட்டு மாமிசம் சாப்பிட்டு பழக்கப்படுத்திக் கொண்டுவிட்டேன். எனவே எனக்கு முதலில் விருந்து போட்டு அனுப்பு!'' என்றார். இல்வலனும் ''ஆகா! உங்களுக்கு என்று தானோ என்னமோ சொல்லி வைத்தாற்போல ஓர் ஆடு என் இல்லத்தில் இப்போது உள்ளது. அதை வெட்டிச் சமைத்துப் போடுகிறேன்,'' எனக் கூறி வாதாபியான ஆட்டை வெட்டிச் சமைத்தான்.

இல்வலனும் வாதாபியான அந்த ஆட்டை நெருப்பில் வாட்டி அகஸ்தியருக்கு உண்ணக் கொடுத்தான். அகஸ்தியர் அந்த ஆட்டு மாமிசத்தை நன்கு அறைத்துச் சாப்பிட்டார்.

இல்வலன் அதுகண்டு, ''அடேயப்பா! நீங்கள் இப்படிச் சாப்பிடுவீர்கள் என்பது தெரியாமல் போய்விட்டதே!'' என்றான். அகஸ்திய ரும் ''சரி, ஒரு பானை நிறைய மது கொண்டு வா! அதனையும் அருந்திவிட்டுச் சற்றுப் படுத்துக் கண்ணயர்கிறேன்,'' என்றார்.

இல்வலனும், ''சரி, அதை இப்பொழுதே கொண்டுவரச் சொல்கிறேன். வாதாபி, வா இங்கே!'' என்று உரக்கக் கூவினான். அகஸ்தியர் மெதுவாகத் தன் வயிற்றைத் தடவிக் கொண்டே, ''வாதாபியா? இனிமேல் அவன் எங்கே வரப் போகிறான்? அவன்தான் ஜீரணமாகிவிட்டானே. வாதாபி ஜீர்ணம்! வாதாபி ஜீர்ணம்!! வாதாபி ஜீர்ணம்!!!'' என்று மூன்று முறை கூறினார்.

இல்வலன் அதுகேட்டு திடுக்கிட்டான். வாதாபியும் வழக்கம் போல் விருந்தாளியின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வராமல் போகவே அவன் பயந்து ஓடியே போய்விட்டான். இப்படியாக அந்த இரு அரக்கர்கள் வழிப்போக்கர்களுக்குக் கொடுத்து வந்த தொல்லை ஒழிந்தது.

அகஸ்தியர் அங்கு இல்வலனும் வாதாபியும் பயணிகளிடமிருந்து பறித்து வைத்திருந்த பணத்தையும் பொருள்களையும் தனக்கு வேண்டிய அளவிற்கு எடுத்துக் கொண்டார். மீதம் இருந்ததைக் கொண்டு ஒரு பெரிய நகரத்தை அவர் அங்கே நிர்மாணித்தார். அதில் ஆயிரக்கணக்கான மக்களைக் குடிபுகச் செய்தார்.

அகஸ்தியர் கண்ட பாறையைச் சுற்றித் தான் இந்த நகரம் அமைந்தது. வாதாபி இறந்ததால் ஏற்பட்ட நகரமாதலால் அகஸ்தியர் அதற்கு வாதாபி எனப் பெயரிட்டார். ஆட்சி முறை பற்றி அவர் அந்தப் பாறையிலேயே செதுக்கி வைத்தார். மக்களே அந்த நகரை அவர் வகுத்துக் கொடுத்த முறையைப் பின்பற்றி ஆண்டு வந்தார்கள்.





# கலைஞன் கணிப்பு

கனகதுர்க்கத்தின் மன்னன் கனகசேனன் மக்கள் மனம் மகிழ ஆட்சி புரிந்து வந்தான். அவனுக்கு உறுதுணையாக அமைச்சர் ஆனந்தசர்மாவும், சேனாதிபதி சிம்மநாதனும் இருந்தனர். ஆனந்தசர்மாவின் நுண்ணறிவால் அண்டை நாடுகள் எல்லாம் கனகதுர்க்கத்துடன் நட்புறவே கொண்டிருந்தன. சிம்மநாதனின் போர் புரியும் திறனை அறிந்ததால் எந்த நாடும் கனகதுர்க்கத்தின் மீது படை எடுக்கத் துணியவில்லை.

கனகசேனனுக்கு வேட்டையாடச் செல்வது மிகவும் பிரியமானது. அதனால் அடிக்கடி காட்டிற்குப் போய் வேட்டையாடிவிட்டு வருவான். இதைப் பற்றி மக்கள் சிலாகித்தே பேசி வந்தார்கள்.

இப்படியே பல வருடங்களாகி விட்டன. தனக்குப் பின் நாட்டை ஆளத் தன் மகன் வீரசேனன் பயிற்சி பெற வேண்டும் என்று எண்ணி கனகசேனன் அவனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டி அதற்கான பட்டாபிஷேகத்தையும் முறைப்படி நடத்தினான். வீரசேனனும் பல துறைகளில் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுத் தன் திறமையை வெளிப்படுத்தி தந்தைக்கு ஏற்ற தனயன் என்ற பாராட்டையும் மக்களிடமிருந்து பெற்றுவிட்டான்.

மக்களுக்குக் குறை எதுவும் இல்லை எனக் கண்ட வீரசேனன் இனித் தன் கவனத்தைக் கலை வளர்ச்சியில் திருப்பலானான். குறிப்பாக அவன் ஓவியக் கலையில் ஆர்வத்தைக் காட்டினான். பல ஓவியங்கள் வைக்கப்பட்டிருந்த 'சித்திர

- கி. அருணா -



பார்த்துவிட்டு எதுவுமே சரியில்லை எனக் கூறி நிராகரித்தான்.

இதற்குக் காரணம் எல்லாப் படங்களிலும் கனகசேனனின் வலது கண் இமைகள் சற்றுக் குறுகி மூடி இருந்தது போலத் தென்பட்டதே யாகும். உண்மையில் கனக சேனனின் வலது கண் அப்படித் தான் இருந்தது.

அதே நாட்டில் ஒரு சிறு கிராமத் தில் கார்மேகன் என்ற இளைஞன் இருந்தான். அவன் ஓவியம் வரை வதில் சிறந்து விளங்கினான். ஆனால் கிராமத்திலிருந்த அவனை ஆதரிப் பவர் யாருமே இல்லை. அதனால் வயிற்றுப் பிழைப்பிற்காக அவன் தலைநகருக்குப் போய்ச் சேர்ந்தான்.

அவன் வீரசேனனைக் கண்டு, ''ஐயா! நான் தங்களது தந்தையின் உருவப் படத்தை வரைந்து கொடுக் கிறேன்,'' என்றான். அதைக் கேட்ட வீரசிம்மன் ஏளனமாகச் சிரித்து, ''மாபெரும் ஓவியர்களால் கூட என் தந்தையின் உருவத்தைச் சரியாக வரைய முடியவில்லை. இளைஞ னான உன்னாலா முடியும்?'' என்று கேட்டான். கார்மேகனும் ''என்னால் முடியும். நான் வரைந்து காட்டு கிறேன்,'' என்று சற்றும் தயங்காமல் கூறினான்.

அப்போது வீரசேனன், ''இதோ பார்! உன்னால் என் தந்தையின் உருவத்தை உள்ளபடியே வரைய முடியாது. நீ முழு நம்பிக்கையுடன் கூறுவதால் ஒரு நிபந்தனை விதிக் கிறேன். நீ மட்டும் சரியாக வரைந்து விட்டால் லட்சம் வராகன்களைக்

மகாலை' அவன் சிறுவயது முதலே சுற்றிச் சுற்றி வந்து அதிலுள்ள படங் களை ரசித்துப் பார்த்தவன். அதில் வம்ச பரம்பரையாக வந்த கனகதுர்க்க மன்னர்களின் உருவப் படங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றோடு தன் தந்தை கனகசேனனின் உருவப் படத்தையும் சேர்த்து வைக்க வீர சேனன் விரும்பினான்.

இதற்காக தன் தந்தையின் உருவப் படத்தை எந்த ஓவியர் சரியாக வரைந்து கொடுக்கிறாரோ அவருக்கு லட்சம் வராகன்கள் பரிசளிக்கப்படும் என்று வீரசேனன் நாடெங்கிலும் பறைசாற்றுவித்தான்.

பல ஓவியர்கள் கனகசேனனின் உருவத்தை வரைந்து வண்ணம் தீட் டிக் கொண்டு வந்து காட்டினார்கள். வீரசேனனோ அவற்றை எல்லாம்

கொடுக்கிறேன். நீ சரியாக வரையா விட்டாலோ உன்னைச் சிறையில் தள்ளிவிடுவேன். வாழ்நாள் முழு வதும் நீ அங்கேயே கிடக்க வேண்டி வரும். சம்மதமா?'' என்று கேட் டான். அதற்கு கார்மேகனும் உடனே சம்மதித்தான்.

கார்மேகன் மற்ற ஓவியர்களைப் போல கனகசேனன் நின்று கொண் டிருப்பது போலவோ அல்லது ஆச னத்தில் அமர்ந்திருப்பது போலவோ வரையவில்லை. அவன் வரைந்த படம் கனகசேனன் குதிரை மீது அமர்ந்து வேட்டையாடும் நிலையில் வில்லில் அம்பை வைத்து வலது கண்ணைப் பாதி மூடி குறி வைப்பது போல இருந்தது.

அதைக் கண்ட எல்லோருமே, ''ஆகா! கனகசேனர் வேட்டையாடு வதை அப்படியே இந்த ஓவியர் நன்கு வரைந்திருக்கிறார். மன்ன ருக்கு வேட்டையாடுவது என்றால் எவ்வளவு பிரியம் என்பது வெளிப் படுகிறது. அவர் அம்பை எய்ய எப்படிக் குறி பார்க்கிறார் என்பதை தத்ரூபமாக ஓவியர் வரைந்திருக் கிறார்,'' என்று பாராட்டினார்கள்.

வீரசேனனும், ''ஆகா! அற்புதம்!! என் தந்தை வேட்டையாடுவதை அப்படியே சித்தரித்திருக்கிறாய். நான் கூறியபடி லட்சம் வராகன்களைக் கொடுக்கிறேன்,'' என்று சொல்லிப் பணமுடிப்பையும் கொடுத்தான்.

அப்போது ஆஸ்தான ஓவியர் கார் மேகனைப் பாராட்டி, ''ஓர் ஓவிய னின் பார்வை நாலாபக்கத்திலும் செலுத்தப்பட வேண்டும். மற்ற ஓவியர்கள் யாவரும் மன்னர் நிற்பது போலவோ அல்லது உட்கார்ந்திருப் பது போலவோ வரைந்து அவரது முகத்தை உள்ளது உள்ளபடியே வரைந்து காட்டினார்கள். ஆனால் எல்லோர் மனதைச் சட்டெனக் கவர மன்னருக்குப் பிடித்தமான வேட்டை யாடும் நிலையை இந்த ஓவியர் வரைந்தார். இவரது சமயோசித புத்தியையும் கலைத்திறனை யும் பாராட்டுகிறேன்,'' எனக் கூறிப் புன்னகை புரிந்தார்.

கார்மேகனும் அந்தப் புன்னகை யில் மறைந்திருந்த உட்பொருளைப் புரிந்து கொண்டான்!





# வியாபாரி விரித்த வலை

கோவிலூரில் கோட்டைய்யன் என்ற பக்காத் திருடன் இருந்தான். அவன் பயங்கரமானவன். அவன் பெயரைக் கேட்டாலே மக்கள் நடுநடுங்கினார்கள். அவனைப் பிடிக்க காவலதிகாரிகள் எவ்வளவோ முயன்றும் அவர்களால் அவனைப் பிடிக்க முடியவில்லை. அந்நாட்டு மன்னனும் அத்திருடனைப் பிடித்துத் தருபவருக்கு லட்சம் வராகன்கள் பரிசளிப்பதாக அறிவித்தான்.

அதே ஊரில் அருணாசலம் என்ற பணக்கார வியாபாரி இருந்தான். அவன் தெய்வ பக்தி உள்ளவன். வியாபாரத்தில் நேர்மையைக் கடைப் பிடித்து லட்ச லட்சமாகப் பணம் சம்பாதித்து வந்ததோடு தாராளமாக தான தர்மங்களையும் செய்து வந்தான்.

ஒருநாள் மாலை அருணாசலத்தின் வீட்டிற்கு ஒரு சன்னியாசி வந்தார். அருணாசலம் அவரை வணங்கி வர வேற்றான். அன்றிரவு தன் வீட்டில் தங்கிப் போகுமாறு வேண்டி அவருக்கு உணவளித்து உபசரித்தான். அவர் படுத்து உறங்க ஒரு தனி அறையையும் கொடுத்தான். அவரும் அங்கு படுத்துக் கொண்டார். அந்த வீட்டில் இருந்த அனைவரும் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

நள்ளிரவில் தன் பணப்பெட்டி இருந்த அறையில் ஏதோ சத்தம் ஏற்பட்டது கேட்டு அருணாசலம் எழுந்து போய் முதலில் அந்த அறையின் ஜன்னல் வழியாக உள்ளே என்ன நடக்கிறது என்று பார்த்தான். அன்று மாலையில் தன் வீட்டிற்கு வந்து தங்கிய சன்னியாசி தன் பணப்பெட்டியருகே நின்று அதைத் திறக்க முயன்று கொண்டிருப்பதை அருணாசலம் கண்டான். அப்போது அவனுக்குச் சன்னியாசி வேடத்தில் வந்திருப்பது பக்காத் திருடனான கோட்டைய்யன் தான் என்பது தெரிந்துவிட்டது. அவனைத் தந்திர மாகப் பிடித்து காவலதிகாரிகளிடம்

- சிவனார் செல்வன் -

கொடுக்க அவனது மூளை மிக வேக மாக வேலை செய்தது.

அவன் உடனே தன் மனைவியை எழுப்பி பணப்பெட்டியருகே நின்ற திருடன் கேட்கும்விதத்தில் உரத்த குரலில், ''நம் குலகுரு சச்சிதானந்த சுவாமிகள் சற்றுமுன் என் கனவில் தோன்றினார். நாம் இவ்வளவு நாட் களாக நம் மகளுக்கு திருமணம் செய்து வைக்க நல்லவனாகக் கிடைப்பானா என்று தானே தேடிக் கொண்டிருந்தோம்? அதற்கு சுவாமி கள் வழி காட்டிவிட்டார். நாளைக் காலை சூரியோதய வேளையின் போது நம் ஊர் அம்மன் கோவிலின் முன் உள்ள அரச மரத்தடியில் ஒரு சன்னியாசி அமர்ந்திருப்பாராம். அவரை மேளதாளத்துடன் நம் வீட்டிற்குஅழைத்து வந்து நம் மகளை அவருக்கு விவாகம் செய்து வைக் குமாறு கட்டளை இட்டார். அதன்படி நான் நாளை சூரியோதய வேளையில் அந்த அரச மரத்தடிக்குச் சென்று அங்கு அமர்ந்திருக்கும் சன்னி யாசியை நம் வீட்டிற்கு அழைத்து வரப் போகிறேன். அதன்பின் அவ ருக்கே நம் மகளைத் திருமணம் செய்து வைக்கலாம்,'' என்றான்.

அவனது மனைவியும், ''குருநாத ரின் மகிமையை என்ன என்பது! அவர் தாம் நம் நலனில் எவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறார். அவர் கூறியபடியே செய்வோம். சூரியோ தயம் ஆகும்போது நீங்கள் அந்த மரத்தடியே போய் அங்குள்ள சன்னி யாசியைத் தரிசித்து அவரை நம் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்துவிடுங்கள்,'' என்றாள்.

அருணாசலமும் அவனது மனைவியும் பேசிக் கொண்டதை



இரும்புப் பெட்டியைத் திறக்க முயன்று கொண்டிருந்த திருடன் கேட்டுவிட்டான்.

அப்போது அவன் தன் மனதில் 'ஆகா! என் வேலை மிகச் சுலபமாகி விட்டதே! இப்போது இந்த இரும்புப் பெட்டியை சிரமப்பட்டுத் திறந்து கொண்டிருக்க வேண்டாம். சன்னியாசி வேஷத்திலேயே இப்போதே நான் இங்கே இருந்து போய் அம்மன் கோவிலின் முன் உள்ள அரச மரத்தின் கீழ் உட்கார்ந்துவிடுகிறேன். சூரியோதயம் ஆனதும் இந்த வியாபாரி அங்கு வந்து என்னை இந்த வீட்டிற்கு அழைத்து வந்துவிடுவான். தனது குருநாதரின் கட்டளைப்படி இவன் தன் மகளை எனக்குத் திருமணம் செய்து வைத்துவிடுவான். அதன்பின் இவனது ஏராளமான சொத்து இவனது மகளோடு கிடைத்துவிடும்,' என எண்ணி அப்போதே அந்த வீட்டை விட்டு வெளியேறினான். நேராக அம்மன் கோவிலின் முன் உள்ள அரச மரத்தடியே போய் அவன் உட்கார்ந்தும் விட்டான்.

இதற்குள் அருணாசலம் ரகசியமாகக் காவலதிகாரிக்குத் தகவல் அனுப்பி சில வீரர்களைக் கொண்டு கோட்டைய்யனைப் பிடிக்க ஏற்பாடும் செய்தான். சூரியோதய வேளைக்கு அவன் அந்த அரச மரத்தடிக்குச் சென்றான். அருணாசலம் வருவதைக் கண்டதும் சன்னியாசி வேஷத்தில் இருந்த கோட்டைய்யன், ''ஆகா! நான் நினைத்தபடியே நடக்கிறது. அருணாசலம் என்னை அழைத்துப் போய்த் தன் மகளைத் திருமணம் செய்து வைப்பான். இனி அவன் பணம் எல்லாம் எனக்கே!'' என்று எண்ணி கண்களை மூடிக் கொண்டு தியானத்தில் மூழ்கி இருப்பவன் போலப் பாசாங்கு செய்தான்.

அப்போது அருணாசலம், ''இவன் தான் கோட்டைய்யன், பிடியுங்கள்!'' எனவே, அங்கே இருந்த காவல் அதிகாரிகள் குபீரெனப் பாய்ந்து அந்தக் கபட சன்னியாசியாக இருந்த கோட்டைய்யனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்கள்.

பக்காத் திருடனைப் பிடித்துக் கொடுத்ததற்காக அருணாசலத்திற்குப் பரிசுத் தொகையும் கிடைத்தது!





# நெறி தவறாதவன்

ரத்தினபுரி மன்னன் ரத்தின தேவன் ஒருநாள் இரவு தன் சேனாதிபதி சிம்ம நாதனுடனும் அமைச்சர் அரவிந்தாட் சருடனும் உட்கார்ந்து பேசிக் கொண் டிருந்தான். அன்று விஜயதசமி நாள். அப்போது திடீரென்று ஒரு குதிரை வீரன் அவர்களின் முன் தோன்றி நின்றான். சேனாதிபதி கடும் கோபத் தோடு ''யார் நீ? உனக்கு என்ன வேண் டும்?'' என்று அதட்டிக் கேட்டான்.

அந்தக் குதிரை வீரனும், ''பார்த் தால் தெரியவில்லை நான் போர் வீரன் என்று? வீரன் வேண்டுவது போரைத் தானே. ஆனால் நான் இப் போது யாருடனும் சண்டை போட வரவில்லை. என் சக்தியைக் காட்டி விட்டு என் போன்ற ஒரு வீரனை உங்கள் நாட்டில் இருப்பதைக் காட்டுவீர்களா என்று சவால் விட்டு விட்டுப் போகவே வந்திருக்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட சிம்மநாதன், ''சரி உன் சக்திதான் என்ன? அதை முதலில் காட்டு!'' எனவே, அந்தக் குதிரை வீரனும், ''இது சக்தி வாய்ந்த வாள். இதனால் உங்களில் யார் வேண்டு மானாலும் என் கழுத்தில் ஒரே வெட்டுதான் வெட்டவேண்டும். ஆனால் எனக்கு ஓர் ஆபத்தும் நேராது. ஆனால் அடுத்த ஆண்டு விஜயதசமி அன்று இன்று என்னை அடிக்கும் வீரன் என் கோட்டையான வீர புரத்திற்கு வந்து தன் கழுத்தில் நான் வெட்டும் ஒரே வெட்டைத் தாங்க வேண்டும்,'' என்றான்.

அதுகேட்டு எல்லோருக்கும் சிரிப்பே வந்தது. வாளால் கழுத்தில் ஓங்கி ஒரு வெட்டு வெட்டினால் யாராவது பிழைத்திருக்க முடியுமா? இறக்கத்தானே வேண்டும்.

சிம்மநாதன் அந்த வீரனருகே போய், ''சரி உன் வாளைக் கொடு. நான் உன் கழுத்தில் ஒரே வெட்டு வெட்டுகிறேன். அதற்குப் பிறகும் நீ பிழைத்திருந்தால் அடுத்த ஆண்டு விஜயதசமியன்று நான் உன்

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வந்த கதை



கோட்டைக்கு வந்து என் கழுத்தை நீட்டி உன் வாள் வெட்டை ஏற்கிறேன்'' என்றான்.

அந்த வீரனும் தனது சக்தி வாய்ந்த வாளை சிம்மநாதனிடம் கொடுத்துவிட்டுத் தன் கழுத்தை நீட்டிக் கொண்டு வெட்டை ஏற்கத் தயாரானான். சிம்மநாதனும் அந்த வாளால் அந்த வீரனின் கழுத்தில் ஒரு வெட்டு வெட்டினான்.

ஆனால் என்ன ஆச்சரியம்! அந்த வாள் அந்த வீரனின் கழுத்தில் பாதி வரை இறங்கியும் ஒரு சொட்டு ரத்தம் கூட வெளியே வரவில்லை. அந்த வீரன் சிரித்தவாறே அந்த வாளைத் தன் கழுத்திலிருந்து எடுத்தான். கழுத்தில் காயம்பட்ட அடையாளமே இல்லை. அந்த வீரனும், ''சரி, அடுத்த ஆண்டு விஜயதசமி அன்று தவறாமல் என் கோட்டைக்கு வந்து சேர்!'' என்று கூறித் தன் குதிரை மீது அமர்ந்து சென்றுவிட்டான்.

ஓராண்டு கழிய மூன்று நாட்கள் இருக்க வீரபுரக் கோட்டையில் விஜயதசமியன்று இருக்க சிம்மநாதன் முன்னதாகவே ரத்தினபுரியிலிருந்து கிளம்பிவிட்டான்.

வழியில் ஓரிடத்தில் யாரோ ஒரு பெண் அலறுவது அவன் காதில் விழுந்தது. அவன் ஓடிப்போய் சத்தம் வந்த இடத்தைப் பார்க்கையில் இரண்டு மூன்று திருடர்கள் ஒரு பெண்ணைக் கட்டிப் போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். அவள் பார்க்க ஓர் அரசகுமாரி போல இருந்தாள். சிம்மநாதன் வாளை உருவி அத்திருடன்கள் மீது பாய்ந்து தாக்கவே அவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள்.

சிம்மநாதன் அப்பெண்ணின் கட்டுகளை அவிழ்த்துவிட்டான். அவளும் தான் அரசகுமாரி எனக் கூறி சிம்மநாதனைப் பற்றி விசாரித்து அவன் வீரபுரக் கோட்டைக்கு செல்லும் காரணத்தைத் தெரிந்து கொண்டாள். அப்போது அவள், ''நீங்கள் என்னைத் திருடர்களிடமிருந்து காப்பாற்றினீர்கள். என் நன்றியைச் செலுத்த இந்த மந்திர மோதிரத்தைக் கொடுக்கிறேன். இது உங்களிடம் இருக்கும்போது எந்த ஆயுதத்தாலும் உங்களுக்கு தீங்கு விளைவிக்க முடியாது,'' என்று கூறி மோதிரத்தைக் கொடுக்க முயன்றாள்.

சிம்மநாதனோ ''வேண்டாம்.

நான் நெறி தவறமாட்டேன். என் சக்தி யைக் கொண்டே வெற்றி பெறு வேன்,'' எனக் கூறி தன் கவசத்தையும் ஆடைகளையும் களைந்து கரையில் வைத்துவிட்டு ஆற்றில் குளிக்கச் சென்றான்.

அப்போது அரசகுமாரி அவனுக் குத் தெரியாமல் அந்த மந்திர மோதி ரத்தை அவனது கவசத்தில் ஒளித்து வைத்துவிட்டுச் சென்றாள். சிம்ம நாதனும் குளித்துவிட்டு கரைக்கு வந்து ஆடைகளையும் கவசத்தையும் அணிந்து கொண்டு சென்று விஜய தசமியன்று வீரபுரத்தை அடைந்தான். அவன் கோட்டைக்குள்போய் குதிரை வீரனைக் கண்டு தான் அன்று சொன்ன சொல்லைக் காக்க வந்திருப்பதாகக் கூறினான்.

அந்த வீரனும் தன் வாளை எடுத் துக் கொண்டு, ''நானும் சொன்னபடி உன் கழுத்தில் ஒரு வெட்டுதான் வெட்டுவேன். அதற்குப் பிறகு நீ எங்கே உயிருடன் இருக்கப் போகி றாய்?'' என்றான். சிம்மநாதனும் கழுத்தை நீட்டினான். அந்த வீரனும் தன் வாளால் ஒரு வெட்டு வெட்டி னான். வாள் கழுத்தில் பாதி வரை இறங்கியும் ஒரு சொட்டு ரத்தம்கூட வெளியே வரவில்லை. சிம்மநாதன் தன் கழுத்தில் பதிந்திருந்த வாளை எடுத்தான். அந்த இடத்தில் வெட்டுப் பட்ட தடையமே இருக்கவில்லை. இருவரும் ஆச்சரியப்பட்டு நின்றனர்.

அப்போது அரசகுமாரி தன் தந் தையுடன் அங்கு வந்தாள். அவள் தன் தந்தைக்கு சிம்மநாதனைக் காட்டி, ''இவர் என்னை முரடர்களிடமிருந்து காப்பாற்றினார். நான் அதற்கு நன்றி செலுத்த என் மந்திர மோதிரத்தைக் கொடுத்து இதன் சக்தியைக் கூறி னேன். இவர்தாம் நெறி தவறாதவர் எனக் கூறி அதை ஏற்க மறுத்தார். நானோ இவருக்குத் தெரியாமல் அந்த மோதிரத்தை இவரது கவசத்தில் மறைத்து வைத்தேன். அதுதான் இவ ரைக் காப்பாற்றியது'' என்றாள்.

வீரனும், ''நீங்கள் இருவரும் கட மையைச் செய்தீர்கள்,'' என மகிழ்ச்சி யுடன் கூற, அரசனும் ''நானும் என் கடமையைச் செய்கிறேன்,'' என்று கூறித் தன் மகளை சிம்மநாதனுக்கு மனம் செய்து வைத்தான்.





# உலகக் கோப்பை - சில தகவல்கள்

**அண்மையில் தென்னாப்பிரிக்காவில் நடக்கும் எட்டாவது கிரிக்கெட் கோப்பைப் போட்டிகளை கிரிக்கெட் ரசிகர்கள் கண்டு களித்துக் கொண்டு தான் இருப்பார்கள். இந்த உலகக் கோப்பை தொடர்பான ருசிகர தகவல்கள் சில இங்கு தரப்படுகின்றன.**

1975-ல் நடந்த முதலாவது உலகக் கோப்பைக்கான போட்டியிலும் 1979-ல் நடந்த இரண்டாவது போட்டியிலும் கிளைவ் லாயிட் தலைமையிலான மேற்கிந்தியக் கிரிக்கெட் அணிவென்றது. 1983ல் நடந்த மூன்றாவது உலகக் கோப்பையை கபில்தேவ் தலைமையிலான இந்திய அணி வென்றது. 1987-ல் நான்காவது உலகக் கோப்பையை ஆலன் போர்டர் தலைமையிலான ஆஸ்திரேலிய அணி வென்றது. 1972ல் ஐந்தாவது உலகக் கோப்பையை இம்ரான்கான் தலைமையிலான பாகிஸ்தான் அணி வென்றது. 1996-ல் உலகக் கோப்பையை ஸ்ரீலங்கா அணி வென்றது. 1999-ல் ஏழாவது கோப்பையை ஆஸ்திரேலியா வென்றது. சென்ற மாதம் எட்டாவது கோப்பைக்கான போட்டிகள் ஆரம்பமாயின.



இந்த எட்டாவது உலகக் கோப்பைக்கான போட்டி கள் பிப்ரவரி 9லிருந்து மார்ச் 23 வரை நடக்கிறது. இந்த விளையாட்டு வளர்ச்சியுற்று எப்படிப் பிரபலமாகியது என்பதை அறிய ஆவல் கொள்வீர்கள் அல்லவா?

## 'ஹோல்சம் ரன்'



இரு முனைகளில் வைக்கப்பட்ட ஸ்டம்ப்கள் இடையே உள்ள தூரத்துள் பேட்ஸ்மேன்கள் ஓட வேண் டும். அதற்கு 'ரன்' என்று பெயர். பேட்ஸ்மேன் தன் இடத்திற்கு வந்து சேருமுன் ஃபீல்டர் பந்தை ஸ்டெம்ப் மீது படும்படி எறிந்து விட்டால் பாட்ஸ்மேன் 'ரன்' அவுட் ஆகிறார். வெகுநாள்கள் வரை பந்து 'அண்டர்ஹேண்ட் பௌலிங்' என்று தாழ்வான நிலையில்தான் போடப்பட்டு வந்தது.

# அஸ்திக்காகப் போராட்டம்




ஆஸ்திரேலியா 1882ல் இங்கிலாந்தை கிரிக்கெட் மேச்சில் தோற்கடித்தபோது லண்டனிலிருந்து வெளியாகும் 'ஸ்போர்ட்டிங் டைம்ஸ்' என்ற பத்திரிகையில் ஒரு அனுதாபச் செய்தி வெளியானது. அது ஓவல் மைதானத்தில் 1882 ஆகஸ்ட் 29ல் இறந்த இங்கிலாந்து கிரிக்கெட் என்ற காதலியின் நினைவில் ஆழ்ந்துள்ள நண்பர்கள், ரசிகர்கள் தெரிவிக்கும் அனுதாபம் இது. முக்கிய குறிப்பு: அவளது உடலை எரித்து ஆஸ்திரேலியர்கள் அஸ்தியைத் தம்மோடு தம் நாட்டிற்கு எடுத்துச் செல்கிறார்கள்.

அடுத்த ஆண்டில் ஆஸ்திரேலியாவில் நடந்த தொடரில் இங்கிலாந்து அணி வெற்றி பெற்றது. கடைசி மேச் முடிந்ததும் சில பெண்கள் ஒரு பெயிலை எடுத்து ஒரு கிண்ணியில் போட்டு எரித்து அந்த அஸ்தியை இங்கிலாந்து அணியின் கேப்டன் இவோப்ளீகுக்குக் காணிக்கையாக அளித்தார்கள். அந்த அஸ்தி மெர்லிபோர்ன் கிரிக்கெட் கிளப்பிடம் (எம்.சி.சி) ஒப்படைக்கப்பட்டது. அது நிரந்தரமாகவே லார்ட்ஸ் மைதானத்தில் வைக்கப்பட்டுவிட்டது.

## பேட் தேர்ந்தெடுத்தல்

மனிதனின் சராசரி உயரம் 5 அடி 6/7 அங்குலம் எனக் கொண்டால் அவன் 2 அடி 11 அங்குல நீளத்தில் 2.4 பவுண்டு நிறையுள்ள பேட்டால் எளிதாக ஆடமுடியும்.

5 அடி 3/5 அங்குல உயரமான மாணவன் 2 அடி 9 அங்குல நீளத்தில் 2.2 பவுண்டு நிறையுள்ள பேட்டால் சுலபமாக ஆடுவான்.

## புகழ் பெற்ற ஆட்ட இடங்கள்

எம்.சி.சி 1788ல் லார்ட்ஸில் ஆரம்பிக்கப்பட்டது. இதை நிறுவியவர் தாமஸ் லார்ட்.

1846ல் ஓவல் கிரிக்கெட் மைதானம் அமைக்கப்பட்டது. இந்த இடம் 17வது நூற்றாண்டில் இங்கிலாந்தில் டச் அரசின் தூதராக இருந்த சர் நோவல் கரோனுக்குச் சொந்தமாயிருந்த பூங்கா.

## கேரி பாக்கரின் ஷோ மேச்கள்

ஆஸ்திரேலியாவின் கேரி பாக்கர் உலகில் பெயர் பெற்ற கிரிக்கெட் விளையாட்டு வீரர்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு 1977ல் ஆஸ்திரேலியாவில் டெஸ்ட் மேச், லிமிடெட் ஓவர் மேச் என நடத்திவிட்டு கிரிக்கெட் விளையாட ஆரம்பித்தார்.

# 'ஸ்டிக்'கிலிருந்து 'ஸ்டம்ப்'




பனிரெண்டாவது நூற்றாண்டில் ஸ்டிக்ஸ் நடப் பட்டன. இவை மெதுவாக ஸ்டம்ப்களாக மாறின. ஸ்டிக்ஸ் 12 அங்குல உயரம். இரண்டு ஸ்டிக்கள் 24 அங்குல இடைவெளியில் நடப்பட்டன. பந்து அந்த இடைவெளியில் நுழைந்து போய்விட்டால் பேட்ஸ் மேன் 'அவுட்'டாகிவிடுவான். இதன் பின் ஸ்டம்புகளின் இடைவெளி குறைக்கபட்டு இரண்டு ஸ்டம்புகள் இடையே இன்னொரு ஸ்டம்ப் நடப்பட்டது.

## இரட்டை சதம் – மூன்று சதம்

எசெக்ஸிற்கு எதிராக 1938ல் கெண்ட் அணி விளையாடிய போது அதன் ஆர்தர் எட்வர்ட் ஃபாக் முதலாவது இன்னிங் ஸில் 224 ரன்களையும் இரண்டாவது இன்னிங்ஸில் 202 ரன்களையும் எடுத் தார். இரண்டு இன்னிங்ஸில் 200 ரன்கள் வீதம் எடுத்த ஒரே ஆட்டக்காரர் இவரே.

இங்கிலாந்தின் கிரஹாம் ஆலன் கூச் 1990ல் இந்தியாவிற்கு எதிராக ஆடிய போது முதல் இன்னிங்ஸில் 331 ரன்களை யும் இரண்டாவது இன்னிங்க்ஸில் 123 ரன்களையும் எடுத்தார். மூன்று சதம் எடுத்த ஆட்டக்காரர் என்ற சிறப்பை இதனால் பெற்றார்.



அழியாப் புகழ்பெற்ற டான் பிராட்மேன் 1927லிருந்து 1949க்குள் 37 இரட்டை சதங்களை எடுத்தார். அதை இன்றுவரை யாரும் மிஞ்சவில்லை.

## லிமிடெட் ஓவர்கள்

இங்கிலாந்து அணி 1970–71ல் ஆஸ்திரேலியாவில் தொடர் மேச்களை விளையாடியபோது மெல்போர்னில் 4வது டெஸ்ட் மேச் நடந்தது. ஆனால் அடர் மழை காரணமாக முதல் மூன்று நாட்கள் ஆட்டம் நடக்க வில்லை. 4வது நாள் இரு அணி களும் லிமிடெட் ஓவர்ஸ் (40 ஓவர்கள் – 8 பால்) ஆட்டம் விளையாட வேண்டும் என்று ஆஸ்திரேலியா கிரிக்கெட் போர்டு முடிவெடுத்தது. இந்த ஆட்டத்தை யாவரும் ரசித்துப் பார்த்தனர். ஆஸ்திரேலியா வெற்றி பெறவில்லை. ஆயி னும் இந்தப்புதிய மாற்றம் ஆஸ்திரேலிய கிரிக்கெட் போர் டிற்குப் பெரும் புகழைத் தந்தது. ஐந்து நாட்கள் 'மந்த நடை ஆட்டம்' என அதுவரை பேசப்பட்டு வந்ததும் குறைந் தது. லிமிடெட் ஓவர் ஆட்டம் யாவரையும் கவர்ந்தது.

# இன்றுவரை உலகக்கோப்பைகள்

மேற்கிந்திய அணி க்ளைவ் லாய்ட் தலைமையில் 1975, 1979 போட்டிகளில் ஒவ்வொரு ஆட்டத்திலும் வெற்றி பெற்றது. இந்தத் தொடர் வெற்றிகளைத் தடுத்து நிறுத்தியது கபில்தேவ் தலைமையிலான இந்திய அணி. ஜிம்பாபவேயில் நடந்த மேச்சில் அணித்தலைவர் கபிலதேவ் 175 ரன்கள் எடுத்தது மிகச் சிறப்பான நிகழ்ச்சி. இந்த மேச்சில் இந்தியா 17 ரன்களே எடுத்து 5 விக்கெட் இழந்தபோது கபில்தேவ் அபாரமாக ஆடி வெற்றியை நிலை நாட்டினார்.

ஆஸ்டிரேலியா 1987ல் நடந்த 8 லீக் மேச்களில் 7ஐ வென்றது. இங்கிலாந்தை கடைசி மேச்சில் விறுவிறுப்பாக ஆடி 7 ரன் வித்தியாசத்தில் தோற்கடித்து நான்காவது கோப்பையை பெற்றது.

ஐந்தாவது கோப்பையை பாகிஸ்தான் நியூஜிலாண்டைத் தோற்கடித்து அடைந்தது. ஆறாவது உலகக் கோப்பையை ஸ்ரீலங்கா தன் நாட்டிலேயே ஆஸ்திரேலியாவைத் தோற்கடித்தது.

1999ல் நடந்த போட்டியில் ஆஸ்திரேலியா 8 விக்கெட்களைக் கையில் வைத்துக் கொண்டு 132 ரன் வித்தியாசத்தில் பாகிஸ்தானைத் தோற்கடித்து ஏழாவது கோப்பையை அடைந்தது.



கிளைவ் லாய்ட்



கபில்தேவ்




ஆலன் போர்டர்

ஸ்டீவ் வாக்



அர்ஜுன் ரண துங்கா



இம்ரான் கான்





# கேளிக்கை நேரம்

டிங்கு தன் கையில் வண்ண பலூன்கள் பலவற்றை வைத்துக் கொண்டிருக்கிறான். ஒவ்வொரு வண்ணத்திலும் அவன் எவ்வளவு வைத்திருக்கிறான்?

தண்ணீரிலிருந்து குதிப்பது என்ன? புள்ளிகளைச் சேர்த்துக் கண்டுபிடியுங்கள்.



இந்த அதிசயச் சிறு பறவையைப் பார்க்க வேண்டாமா? கரும்பலகையில் இதன் உருவத்தின் பாகங்கள் உள்ளன. அவற்றை நீங்கள் ஒரு பேப்பரில் வரைந்து கொண்டு சரியாக இணைத்துப் பாருங்கள்.



இந்தப் பறவைகள் பார்ப்பதற்கு ஒன்றுபோல இருந்தாலும் இவற்றில் ஒன்றே ஒன்று வேறுபட்டு உள்ளது. அது எது?








முயல் ரோனுவுக்கு பிஸ்கட் என்றால் மிகவும் பிடிக்கும். அதன் கையிலுள்ள பிஸ்கட்போல கீழேயுள்ள தட்டுகளில் ஒன்றில் பிஸ்கட்டுகள் உள்ளன. அது எந்தத் தட்டு?







வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு மே 2003 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**

## வாழ்த்துக்கள்!

ஜனவரி 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

ப. பார்வதி, C/o. பழனிசாமி
11/32, நந்தவன வீதி,
குறிஞ்சிப்பாடி - 607302,
கடலூர் மாவட்டம்.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





முதுமையிலும் அறிவு தாகம்!
இளமையிலேயே அறிவு வேகம்!!

## விடைகள் கேளிக்கை நேரம் (பக்கம் 64-65)

டிங்கு பிடித்திருப்பது 4 பழுப்பு, 5 சிவப்பு, 3 மஞ்சள், 3 ஊதா, 1 பச்சை பலூன்கள்.

D பறவை மாறுபட்டது.

ரானு முயலின் பிஸ்கட் தட்டு 2-ல் உள்ள பிஸ்கட்டுகள் போன்றது.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

சின்டுவின்
விருப்பம்

மைசூர் சாண்டல்
பேபி சோப் சந்தன, பாதாம்
எண்ணெய்களைக்
கொண்டது. அது
சருமத்திற்கு மிகவும் ஏற்றது.




புத்திசாலிக்
குழந்தைகளின்
விருப்பம் மைசூர்
சாண்டல்
பேபி சோப்






Almond oil moisturiser and antiseptic soap.

கடந்த 80 ஆண்டுகளாக
சந்தனத்தின் நற்குணத்தை
உங்கள் இல்லத்திற்குக்
கொண்டு வருகிறது
மைசூர் சாண்டல்ச சோப் நிறுவனம்

